உ

ஸ்ரீ வேங்கடேசாய நம:

# ஸ்ரீ வேங்கடேஸ்வர லீலா மஹாத்மியம்.



ஸ்ரீ N சுப்பரமணியம் அவர்கள் எழுதிய
தெலுங்கு பதிப்பிலிருந்து
ஸ்ரீ D. K. ஸ்ரீனிவாசராவ் அவர்களால்
தமிழில் மொழி பெயர்க்கப்பட்டது,

பப்ளிஷர்:

ஸ்ரீ வேங்கடேவரா புக்டிபோ,
திருமலை.

1959

 [விலை. 1—4—0

# முகவுரை

"கலௌ வேங்கட நாயக:" என்று பிரசித்தி பெற்று விளங்கும் பூலோக வைகுண்டமான இந்த க்ஷேத்திர மஹாத்மியம், பகவான் இந்த க்ஷேத்திரத்தில் நடத்திய லீலைகளை மிகவும் எளிதாக தமிழில் மொழிபெயர்க்கப் பட்டுள்ளது ஆதலால் பக்தகோடிகள் இந்த லீலா மஹாத்மியத்தை படித்து பக்தி உண்டாகப்பெற்று, ஸ்ரீ வேங்கடேஸ்வரருடைய கிருபைக்கு பாத்திரர்களாக வேண்டுமென்று பிரார்த்திக்கிறேன்.

இப்படிக்கு,

**D. K. ஸ்ரீனிவாசராவ்,**

திருமலை.

# பொருளடக்கம்.


கிருதயுகத்தில் ஸ்வேதவராஹ மஹிமை .... 2

கிருதயுகத்தில் இந்த க்ஷேத்திரத்திற்கு
விருஷபாத்ரி என்ற பெயர் உண்டாகுதல் .... 5

திரேதாயுகத்தில் தசரதன் தவம்செய்து
புத்திரர்களை பெறுதல் (ராமாவதார மஹிமை) .... 7

திரேதாயுகத்தில் "அஞ்சனாத்ரி" என்ற பெயர்
உண்டாகுதல் .... 11

கிருஷ்ணாவதார மஹிமை .... 12

துவாபரயுகத்தில் இந்த பர்வதத்திற்கு சேஷாசலம்
என்ற பெயர் உண்டாவதற்கு காரணம் .... 14

கலௌ வேங்கட நாயகः .... 16

பிருகுரிஷி திருமூர்த்திகளை பரீக்ஷிக்கும்போது
விஷ்ணுவின் மார்ப்பில் உதைத்தல் .... 17

ஸ்ரீ லக்ஷ்மி விஷ்ணுவின்மேல் கோபம்கொண்டு
கொல்லாபுரம் சேருதல் .... 19

ஸ்ரீ விஷ்ணு வைகுண்டத்தை விட்டு ஓர் புற்றில்
வசித்தல் .... 21

லக்ஷ்மி பசு கன்றுகளை சோழராஜனுக்கு விற்றல் .... 23

கோபாலகன் கோடலியால் ஸ்ரீனிவாசனை
அடித்தல்; சோழராஜனுக்கு சாபம் .... 24

ஸ்ரீனிவாசனை வகுளாதேவி சந்தித்தல் .... 27

ஸ்ரீ பத்மாவதி ஜனனம் .... 29

ஸ்ரீனிவாசன் வேட்டையாட சென்று பத்மாவதியை
பார்த்து மோகித்தல்; பத்மாவதி கற்களால்
அடித்தல் .... 31

பத்மாவதி விருத்தாந்தம் வகுளாதேவிக்கு

வகுளாதேவி நாராயணபுரத்தில் ஆகாசராஜனை
சந்தித்தல் ... 39
ஆகாசராஜன் ஸ்ரீனிவாசனுக்கு மணஓலை
எழுதியனுப்புதல் .... 43
ஸ்ரீனிவாசன் தன் குலதெய்வத்தை பூஜித்தல் .... 48
ஆகாசராஜன் ஸ்ரீனிவாசனுக்கு பத்மாவதியை
விவாஹம் செய்வித்தல் .... 51
ஸ்ரீனிவாசனும் பத்மாவதியும் அகஸ்தியாஸ்ர
மத்தில் வசித்தல் . 55
தொண்டமானன் ஸ்ரீனிவாசனுக்கு ஆலயம
கட்டுதல் .... 59
பிரம்மா ஸ்ரீனிவாசனுக்கு பிரம்மோத்ஸவம்
செய்வித்தல் .... 62
உத்ஸவ விபரம் .... 63
கூர்மண் என்ற பிராம்மணன் சரித்திரம்;
ஸ்ரீனிவாசன் சிலையாக மாறுதல் .... 65
தொண்டமானன் சேஷாத்ரி சேர்ந்து
ஸ்ரீனிவாசனை பூஜித்தல் .... 67
குயவனுக்கு மோக்ஷம் கொடுத்தல் .... 71
தொண்டமானனுக்கு வரம் கொடுத்தல் .... 73
ஸ்ரீனிவாசன் லக்ஷ்மியைவிட்டு பிரிந்ததை
பத்மாவதியிடம் கூறுதல் ... 73
லக்ஷ்மி கொல்லாபுரததில் தவம் செய்யும்போது
ஸ்ரீனிவாசன் தேடுதல் .... 77
அசரீரி ஸ்ரீனிவாசனை தவம்செய்யும்படி கூறுதல் .... 78
ரம்பை, ஊர்வசி முதலானவர்கள் ஸ்ரீனிவாசனின்
தவத்தை பங்கப்படுத்தல் .... 79
லக்ஷ்மி ஸ்ரீனிவாசன் மார்ப்பில் சேருதல் .... 82
சுகமுனிவர் சூரியனுக்கு சிருஷ்டி ஸ்திதிலயங்களை
தெரிவித்தல் .... 91

கலியுகத்தில் வேங்கடாசலம் என்ற பெயர் உண்டாகுதல் 9(

தீர்த்தமஹாத்மியங்கள் 101

சுவாமி புஷ்கரணி மஹாத்மியம் 10[illegible]

பாபவிநாச தீர்த்தம் 10[illegible]

ஆகாசகங்கை தீர்த்தம் 103

கோகர்பம் என்கிற பாண்டவதீர்த்தம் 103

ஜாபாலி தீர்த்தம் 103

சக்ர தீர்த்தம் 104

தும்புரு தீர்த்தம் 104

இராமகிருஷ்ண தீர்த்தம் 105

குமாரதாரை தீர்த்தம் 106

வைகுண்ட தீர்த்தம் 106

சப்தபர்வத நாமங்கள் 107




உ

ஸ்ரீ லக்ஷ்மி வெங்கடேசாய நம:



ஸ்ரீ அலர்மேலு மங்கத்தாயார்

ஸ்ரீ

ஸ்ரீனிவாஸ பரப்பிரம்மணேநம:

# ஸ்ரீ வேங்கடேஸ்வர

# ❀ லீலா மஹாத்மியம் ❀

ஸ்லோ: வேங்கடாத்ரி ஸமஸ்தனார்
பிரம்ஹாண்டே நாஸ்திகிம்சந ।
வேங்கடேஸ ஸமோதேவோ
நபூதோநபவிஷ்யதி: ॥

ஸகலகுண ஸம்பன்னர்களான சௌனகாதிமஹா முனிவர்கள் அவர்களுடைய நித்யானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு மந்தஹாஸமான வதனங்களுடையவர்களாய் கலியுகத்திலுள்ள 108 திருப்பதிகளில் பிரத்யக்ஷவைகுண்டமென்று பிரசித்திபெற்று பக்தர்களுக்கு முக்தியைக் கொடுக்கும் ஸ்ரீ வேங்கடாசல மஹாத்மியத்தைக் காதார கேட்டு. ஆனந்திக்க விரும்பவர்களாய், பௌராணிகோத்தமரான சூதமுனிவரைப்பார்த்து சொல்லுகிறார்கள் மஹாத்மா இப்புவியிலுள்ள 108 திருப்பதிகளில் மோக்ஷப்ரதமான வேங்கடாசல மஹாத்மியத்தைக் கேட்டு ஆனந்திக்க விரும்புகிரோமென்று சொல்ல சூதமுனிவர் சௌனகாதி முனிவர்களைப் பார்த்து சொல்லுகிறார்: நீங்கள் வேங்கடாசல மஹாத்மியத்தை என்னால் கேட்டறிய விரும்பியதினால் முதலில் ஸ்ரீமன் நாராயணன் கிருத, திரேத, துவாபர யுகங்களில் எதற்காக அவதரிதது துஷ்டர்களை ஸம்ஹரித்து ஸிஷ்டர்களை பரிபாலித்தாரோ அதை முதலில் சுருக்கமாய் தெரிவித்துபிறகு கலியுகத்தில் பிரகாஸிக்கும் ஸ்ரீ வேங்கடாசல மஹாத்மியத்தை சொல்லுவதாய் கூறினார். சௌனகாதி முனீந்திரர்கள் சந்தோஷமடைந்தனர் சூதமுனிவர் வேங்கடாசல மஹாத்மியத்தை இப்படியாக சொல்லலுற்றார்.

ஸ்லோ॥ கிரிதேதோ நரஸிம்ஹபூதோ
திரேதாயாம் ரகுநந்தனு ।
துவாபரே வாசுதேவஸ்ச
கலௌவேங்கடநாயக: ॥

# கிருதயுகத்தில் ஸ்வேதவராஹ மஹிமை

கிருதயுகத்தில் ஸ்ரீமன்நாராயணன் பாற்கடலில் ஸயனித்திருக்கும்போது பகவானின் நபகமலத்தில் சதுர்முக பிரம்மா அவதரித்து பகவானைக் குறித்துதவம் செய்தார் அப்போது ஸ்ரீமன்நாராயணன் பிரம்மாவுக்கு பிரத்யக்ஷமாய் ஸிருஷ்டியை ஆரம்பிக்கும்படி ஆக்ஞாபித்தார் அப்போது பிரம்மா சகலபுவனங்களையும் ஸிருஷ்டித்தார் அந்த புவனங்களை ஸ்ரீமஹாவிஷ்ணுவே பரிபாலித்துவந்தார். இப்படி பரிபாலித்துகொண்டே பல யுகங்கள் கடந்தன. ஒரு நாள் ஸனகஸனந்தனதிகள் பகவானை தரிசிக்க வைகுண்டத்திற்குசென்றனர் பகவான் லக்ஷ்மீஸமேதமாய் ஹம்ஸதூலிகையின் மேல் ஸயனித்திருக்கும்போது துவாரபாலகர்கள் வைகுண்டவாயிலே காத்துவந்தனர். அச்சமயம் ஸனகஸனந்தனதிகள் வைகுண்ட துவாரத்தினிடம் சென்றனர், துவாரபாலர்கள் ஸனகஸ்னந்தனதி முனிவர்களைப் பார்த்து பகவான் லக்ஷ்மீஸமேதராய் ஹம்ஸதுலிகையில் ஸயனித்திருக்கிறார் தாங்கள் தற்சமயம் அவரை தரிசிக்க முடியாது என்றனர் அப்போது ஸனகஸனந்தனதிகள் துவாரபாலகர்களை பார்த்து பகவான் எப்போது எவ்விடமும் எப்படியிருப்பினும் அவரை தரிசிக்க நமக்கு தடையிருக்காது யென்று சொல்லியவாரே துவாரத்தின் சமீபம் சென்றனர் துவாரபாலகர்கள் ஸனகஸனந்தனதிகளை ஆக்ஷேபித்தனர் உடனே ஸனகஸனந்தனதிகள் கோபம் கொண்டவகளாய் துவாரபாலகர்களைப் பார்த்து நீங்கள் ராக்ஷஸவம்ஸத்தில் பிறக்கக் கடவீர்களென்று சாபமிட்டனர். அவர்கள் சாபமிட்டவுடனே துவாரபாலகர்களுடைய க்ரீட, சங்கு, சக்ர, கதை முதலானவைக ளற்றவர்களாய் நின்றனர். இதற்குள்

பகவான் இவ்விஷயங்களை தெரிந்துக்கொண்டு ஸனகஸ நந்தனாதிகளுக்கு தரிஸனம் கொடுத்தார். அப்போது துவார பாலகர்கள் விஷ்ணுமூர்த்தியை தரிசிந்து தங்களுக்கு ஏற் பட்ட இந்த சாபத்தை நிவர்த்திக்க முறையிட்டலர் விஷ்ணு மூர்த்தி துவாரபாலகர்களைப் பார்த்து ஸனகஸனந்தனாதி கள் கொடுத்தத சாபத்தைஅவர்களே நிவர்த்திக்கவேண்டு மென்று சொன்னார் ஸனகஸனந்தனார் துவாரபாலகர் களுடைய சாபத்தை நிவர்த்திக்க நினைத்து அவர்களைப் பார்த்து நாங்கள் கொடுத்த சாபம் வீணாகாது ஆனாலும் நீங் கள் சினேகபாவத்துடன் ஐந்து ஜன்மங்களில்; விரோதி காளாய் மூன்று ஜன்மங்களில் ஸ்ரீ மாஹாவிஷ்ணுவின் பாதாரவிந்தம் சேருவீர்களாவென்று கேட்க, துவாரபாலகர் கள் மூன்று ஜன்மங்களில் விரோதமாய் ஸ்ரீமன் நாராய ணனின் பாதாரவிந்தம் சேருவதாய்ச் சொல்ல, ஸனகஸ னந்தனாதிகள் சம்மதித்து புறபட்ச் சென்றனர். பிறகு துவா ரபாலகர்கள் ஹிரண்யாக்ஷக்ஷ, ஹிரண்யகஸ்யபகளாய் பிறந்து இந்திராதி தேவர்களை ஹிம்ஸிக்கத் தொடங்கினர் இந்த இராக்ஷஸபாதைகளை தாளாமல் தேவர்கள் ஸத் யலோகம் சென்று பிரம்மாவிடம் முறையிட்டனர். உடனே பிரம்மதேவன் அவர்களை அழைத்துக்கொண்டு வைகுண் டத்றகு சென்றார் அப்போது ஹிரண்யாக்ஷக்ஷன் பூமியை பாய்போல் சுற்றிக்கொண்டு ரஸாதலத்திற்குச் சென்று நரகத்தால் கோட்டைகட்டி பூமியை மறைத்து வைத்தான்

பிரம்மாதி தேவர்கள் வைகுண்டத்திற்ச் சென்று தமக்கு ஏற்பட்டுள்ள இராக்ஷக்ஷஸ பாதையை நிவர்த்திக்கும்படி விஷ்ணுவை பிரார்த்தித்தனர் அப்போது விஷ்ணு பிரம்மாதி தேவர்களை தேற்றி ஹிரண்யாக்ஷக்ஷனைக் கொல்லநினைத்து ஸ்வேதவராஹ ரூபமெடுத்து ரஸாதலத்திற்குச் சென்று ஹிரண்யாக்ஷக்ஷனைக் கொன்று பூமியைக் கொண்டுவந்து யதாஸ்தானத்தில் நிறுத்தினார் அப்போத தேவர்கள் ஆதிவராஹ ரூபத்திலுள்ள விஷ்ணு மூர்த்தியின்மேல் புஷ்பமாரி பொழிந்தனர் துஷ்டனான ஹிரண்யாக்ஷக்ஷனைக் கொல்ல யெடுத்த இந்த கோரரூ

பத்தை சாந்திக்க பலவிதங்களில் ஸ்தோத்தரம் செய்தனர். அப்போது மஹாவிஷ்ணு சாந்தி அடைந்தார் இதற்குள் ஹிரன்யகஸ்யபன் தன் ஸகோதரனுடைய மரணவார்த்தையைக் கேட்டு ஸகோதரனைக்கொன்ற நாராயணனைக் கொல்ல பிரதிக்ஞை செய்து பதினுங்த லோகங்களையும் தேடத்தொடங்கினன். அப்போது பிரஹல்லாதன் மூலமாய் ஹிரண்யகஸ்யபனைக் கொல்ல நரஸிம்மாவதார மெடுத்து ஹிரண்யகஸ்யபனைக் கொன்றார். இந்த கோரராக்ஷஸர்களை கொன்றதினல் தேவர்களுடைய துக்கம் தீர்ந்ததென்று பிரம்மதேவன் விஷ்ணுவிற்கு நமஸ்கரித்து இந்த துஷ்டர்களைக் கொல்லவெடுத்த வராஹவதாரமும் நரஸிம்மவதாரமும் பிரசித்திபெற்று கலியுகத்தில் பக்தர்களைக்காக்க இந்தஅவதாரங்கள் சாஸ்வதமாய் பூலோகத்திலிருக்க பிரம்மா வரம் கேட்டருளினர். விஷ்ணு உன்னிஷ்டம்போல் ஆகட்டுமென்று வரம் கொடுத்து நரசிம்மவதாரபுண்ணிய க்ஷேத்திரமான அஹோபிலத்திலும் ஸ்வேதவராஹ ரூபத்தில் சேஷாசலத்திலும் நிவசிக்க நிச்சயித்துக்கொண்டு, கோமதிக்குத் தெற்கில் அறுபது யோஜனை தூரத்திலும், கிழக்கி சமுத்திரத்திற்கி ஐந்து யோஜனை தூரத்திலும் சுவர்ணமுகி வடக்கில் அறையோஜனை தூரத்திலுமுள்ள சேஷாசலத்தில் நிவசிக்க நிச்சயித்தவராய், கருடனை அழைத்து நீ வைகுண்டத்திற்குச் சென்று க்ரீடாத்ரியை எடுத்துவா யென்று சொல்லி தான் சிலகாலம் இந்த வராஹ ரூபத்தில் சேஷாசலத்தில் வசிக்க எண்ணியிருப்பதாய் சொன்னர் உடனே கருடன் வைகுண்டத்திற்குச் சென்று நவரத்தினங்களுடன் கூடிய தங்க சிகரங்களுடன் சுப்பிரசித்தியாய் தேவ, கந்தர்வ, கிம்புரிஷர் முதலான தேவர்கள் நிறைந்து நித்யமுக்த காமரூபர்களால் ஸேவிக்கப்பெற்று, பக்தர்களுக்கு இஷ்டார்த்தங்களைக் கொடுத்து மோக்ஷப்பிரதமான ஆதிசேஷ ரூபத்தில் பிரகாசிக்கும் க்ரீடாசலத்தை கருடன் தன் புஜத்ன்மேல் யெடுத்துவந்து சேஷாசலம் சேர்ந்து ஆதிவராஹஸ்வாமி நிர்மித்த ஸ்ரீஸ்வாமி புஷ்கரணிக்கு மேற்குபாகத்தில் நிம்மதியாய் வைத்தான் அப்போது வராஹ ரூபத்திலுள்ள பகவான் சதுர்முகனைப்பார்த்து நான் [illegible]

சமேதமாய் வசித்து வருவேன், நீங்கள் என்னை தரிசிக்க விரும்பும் போது சேஷாத்ரியில் வந்து என்னைக் குறித்து தியானித்தால் தரிசனம் தரிவதாய் வாக்களித்து கருடனால் கொண்டுவரப்பட்ட க்ரீடாத்ரியில் பிரவேசித்தார். அப்போது இந்திராதி தேவர்கள் வராஹரூபத்திலுள்ள விஷ்ணுவின்மேல் புஷ்பமாரி பொழிந்து அநேக விதங்கலில் தோத்திரம் செய்து, அவரவர்களுடைய நிஜஸ்தானங்களுக்குச் சென்றனர் பிறகு வராஹஸ்வாமி சேஷாசலத்தில் வசித்து அவ்விடம் புண்ணிய தீர்தங்களில் வசித்துவந்த பக்தர்களுக்கு தரிசனம் கொடுத்து, அவர்களால் செய்யப்படும் யாக பலன்களை ரமா சமேதராய்ப் பெற்றுவந்தார் இப்படி பக்தர்களுக்கு தரிசனம்தந்து யாகபலன்களை பெற்றுவந்த விஷ்ணுவைப் பார்து முனிவர்கள், தவசிரேஷ்டர்கள் பரமானந்த அடைந்தவர்களாய் தங்களுடைய பாக்கியங்களைக் கொண்டாடி ஸதா பகவானை தியானித்து காலங்கழித்து வந்தனர்

## கிருதயுகத்ல் இந்த க்ஷேத்திரத்திற்கு விருஷபாத்ரி என்றபெயர் உண்டாகுதல்

இந்த க்ஷேத்திரத்திற்கு வடகிழக்கில் சுமார் 8 மைல்தூரத்தில் தும்புரு தீர்த்தம் என்ற பவித்திர ஸ்தலம் யிருக்கிறது அவ்விடம் விருஷபாசுரன் என்கிற ராக்ஷஸன் நாரஸிம்ம ஸாலக்ராயத்தைப் பூஜிதது பிரதிதினம் அந்த ஸாலக்ராமத்திற்கு தன் தலையைவெட்டி, அந்த தலையை புஷ்பங்களுடன் சேர்த்து அந்த ஸாலக்ராமத்திற்கு சமர்ப்பித்து வந்தான் பிரதிதினமும் அவனுக்கு சிரசு வழக்கம்போல்முளைத்து வந்தது இப்படி இருபது வருஷம் பூஜிரதுக்கொண்டு, அவ்விடம் தவம் செய்துவந்த ருஷிகளை ஹிம்ஸித்து வந்தான், ருஷிகள் இந்த அரக்கனின் பாதையை தாங்காமல் எல்லோரும் சேர்ந்து ஏககாலத்தில் பகவானை தியானம செய்தனர். பிறகு பகவான் ருஷிகளுக்கு அபயம்கொடுத்து, விருஷபாசுரனுக்கு பிரத்யக்ஷமானார், உடனே விருஷபாசுரன் பகவானுக்கு நமஸ்கரித்து, ஓ தேவா! எனக்கு வரங்களொன்றும்

வேண்டாம்; இந்திரபதவியோ, பிரம்ம பதவியோ எனக்குத் தேவையில்லை, உன்னுடன்யுத்தம் புரியவேண்டுமென்பதே என் கோரிக்கை யென்று சொன்னான். உடனே விஷ்ணு பகவான் விருஷபாசுரனைப் பார்த்து, என் பக்தர்களுக்கு கொடுக்காத பதார்த்தம் என்னிடம்ஒன்றுமில்லை, நீயும் என் பக்தனானதால் என்னுடன் யுத்தம் செய்வாயாகவென்று கூற; விருஷபாசுரன் விஷ்ணுவுடன் யுத்தம்செய்ய சித்தமானான். இப்படி விருஷபாசுரனும் பகவானும் ஒருவருடனொருவர் யுத்தம் செய்துக் கொண்டிருக்கும்போது ஆகாய மார்க்கத்தில் தேவர்கள் இவர்களுடைய யுத்தத்தைப் பார்த்து ஜயபேரிகை முழங்க, இவர்கள் ஒருவர் மேலொருவர் பாணங்களை ஏவி சிலகாலம் யுத்தம் செய்த பிறகு, விஷ்ணுபகவான் சக்ராயுதத்தை யெடுத்தார், உடனே விருஷபாசுரன் விஷ்ணுவிற்கு நமஸ்கரித்து, ஸ்வாமி! இந்த சுதர்ஸனத்தின் மஹிமையை நான் அறிவேன் இந்த சுதர்ஸனத்தால் ஹதம் செய்யப்பட்டு சுவர்க்கலோகமடைவேன், ஆனால் இந்தப் பிராணப் பிரயாண சமயத்தில் எனக்கு ஒரு வரம்கொடு யென்று கேட்டான். அப்போது தயா சுபாவமுள்ள பகவான் விருஷபாசுரனை ஆலிங்கனம் செய்துகொண்டு, உனக்கு என்னவரம் வேண்டுமோ கேள் என்று கேட்டார். பிறகு விருஷபாசுரன் பகவானுக்கு நமஸ்காரித்து நீங்கள் வசித்து வரும் இந்தபர்வதத்திற்கு என் பெயரிருக்க வரம் கொடுக்க வேண்டுமென்று பிரார்தித்தான் விஷ்ணு விருஷபாசுரனுக்கு அப்படியே ஆகக்கடவதென்று சொல்லி, இந்த பர்வதத்திற்கு "விருஷபாத்திரி" யென்று பெயர்வைத்து அவனுக்கு மோக்ஷம் தந்தார் இக்காரணத்தால் கிருதயுகத்தில் "விருஷபாத்ரி" என்று பெயர் உண்டாயிற்று.



# திரேதாயுகத்தில் தசரதன் தவம்செய்து புத்திரர்களைப் பெறுதல்

(ராமாவதார மஹிமை)

திரேதாயாம் ரகுநந்தனு ॥

திரேதாயுகத்தில் ஹிரண்யாக்ஷ ஹிரண்யகஸ்யபர்கள் ராவண, கும்பகர்ணர்களாய்ப் பிறந்து இந்திராதி தேவர்கள் முதல் அஷ்டதிக்பாலகர்கள், ரிஷிகள், கந்தர்வர்கள், கின்னர, கிம்புருஷர்கள், சித்த, வித்யாதரர் முதலான தேவர்களையும், மானவர்களையும், அனேக விதங்களில் இம்சிக்க தொடங்கினர் இவர்கள் ஹிம்சையிலிருந்து தப்பித்துக் கொள்ள வழிகாணுமல் கஸ்யபர், கௌதமர், அகஸதியர், வாமதேவர், சதானந்நர், ஸனகஸனந்தனுதி முனிவர்கள் இந்த ராக்ஷஸர்களுடைய பாதயை விஷ்ணுவுக்கு தெரிவிக்க வைகுண்டத்திற்குச் சென்றனர் ஆனல் விஷ்ணு வைகுண்டதில் இல்லையென்று தெரிந்து, விஷ்ணு இருக்குமிடம் தெரியாமல் தேடித்தேடி பிறகு க்ஷீர்ஸாகரத்திற்கு வடக்கு தீரத்தில் சென்று விஷ்ணு வைக்குறித்து தியானம் செய்தனர். சில காலத்திற்கு பிறகு ஒரு மஹாபுருஷன் பிரத்யக்ஷமாய் விஷ்ணு இவ்விடமில்லை என்றும் பூமியின்மேல் ஏதோ ஒரு பர்வதத்தில் ரமா சமேதராய் வசித்து வருதவாய்ச் சொல்லி மாயமானுர். பிறகு அவர்கள் தியானத்தினின்றுயெழுந்து பூலோகத்திற்கு வந்துகொண்டிருந்தனர் வழியில் நாரதர் அவர்களை சந்தித்து நான் வைகுண்டத்திற்குச் சென்று, மகாவிஷ்ணுவை காணுமல் திரும்பி வந்துக் கொண்டிருக்கிறேன், விஷ்ணு யிருக்குமிடம் சதுர்முகனொருவனுக்குத் தெரியுமே தவிர நமக்குத் தெரியாதென்றுசொல்லி நாமெல்லோரும் சத்யலோகம் சென்று ராவணுதி அரக்கர்களின் உபாதைகளை அவருக்கு தெரிவிக்க வாருங்களென்று சொல்லி, அவர்களை அழைத்துக்கொண்டு சத்யலோகம் சென்று சதுர்முகனுக்கு சாஷ்டாங்க தண்டம்செய்து, ராவணுதி அரக்கர்களால் தங்களுக்கு ஏற்பட்ட பாதையை

நிவர்த்திக்க பிரார்திக்தனர். அப்போது சதுர்முகன் அவர்களை சமாதானப்படுத்தி, ஓ முனிசிரேஷ்டர்களே! இராவணன் சிவனைக்குறித்து தவம்செய்து தேவர்களால் அவனுக்கு மரணமில்லாதபடி வரம் பெற்றுள்ளான் அவனைக் கொல்ல தேவர்களால் முடியாது. நாமெல்லோரம் சேஷாத்ரி சேர்ந்து, ரமாஸமேதரான விஷ்ணுவைப பிரார்த்தித்து அவரால் இந்த ராக்ஷஸ வம்ஸத்தை நிர்மூலிக்கும்படி பிரார்திக்க வாருங்களென்று. அவர்களை அழைத்துக் கொண்டு சேஷாசலம் சேர்ந்து ஸ்வாமி! புஷ்கரணியில் ஸ்நானம் செய்து யெல்லோரும் சேர்ந்து மஹாவிஷ்ணுவைப் பிரார்த்தித்தனர்.

அயோத்தியைப் பரிபாலித்துவந்த தசரத ராஜன் தனக்கு புத்திர ஸந்தானமில்லாத காரணத்தால் தன் குருவான வசிஷ்ட முனிவரின் உபதேசத்தால் சேஷாத்ரி சேர்ந்து பகவானைக் குறித்து தவம்செய்துவந்தார் இப்படி தவம் செய்யும்போது வசிஷ்டர் தசரதனைப் பார்த்து, தசரதா! இவ்விடம் பிரம்மாதி தேவர்கள் விஷ்ணுவைக்குறித்து தியானித்து வருகின்றனர் அவர்களுக்கு பகவான் தவராமல் தரிசனம் தருவார். உனக்கும் மஹா மந்திரம் உபதேசிக்கிறேன். நீயும் அவர்களுடன் சேர்ந்து பகவானைத் துதியென்று சொல்லி, தசரதனுக்கு மந்திரோபதேசம் செய்தார் அப்பொழுது தசரதன் தன் குருவின் கட்டளைப்படி மந்திரோபதேசம் பெற்று, பிரம்மாதி தேவர்களுடன் சேர்ந்து விஷ்ணுவைப் பிரார்த்திக்கத் தொடங்கினர்.

இப்படியாக எல்லோரம் சேர்ந்து பகவானைத்தியானிக்கும் சமயத்தில் அவ்விடம் பெரிய சப்தம்கேட்டது அப்போது சப்தம் வந்த திசையைப பார்த்து தியானித்து நின்றனர் கொஞ்ச நேரத்திற்கெல்லாம் அவ்விடம் தங்கமயமான ஒரு விமானம் தோன்றிற்று, எல்லோரும் அதைப்பார்த்து தியானித்தனர் சிறிது நேரத்திற்கெல்லாம் அந்த விமானத்தில் ஸ்ரீமந் நாராயணன் சதுர்ஜங்களுடன், சங்கு, சக்ர, கதா, பத்மங்களை தரித்தவராய் லக்ஷ்மீ சமேதராய் பிரத்யக்ஷமானர். அப்போது பிரம்மாதி தேவர்கள் கைகூப்பி தன்ட

னிட்டவர்களாய் அநேக விதங்களில் தியானித்து, ராவணுதி அரக்கர்களால் அவர்களுக் குண்டான உபாதைகளை நிவர்த்திக்கும்படி வேண்டிக் கொண்டனர். இப்படி வேண்டிய தேவர்களைப் பார்த்து, இராவணன் சிவனிடம் அநேக வரங்கள் பெற்றுள்ளான், தேவர்களால் அவனுக்கு மரணமில்லை மானவ அவதாரித்தில் அவனை சம்ஹரிக்க வேண்டும்; நீங்கள் சில காலம் இக்கஷ்டத்தை சகித்துக் கொண்டிருங்களென்று, தேவர்களைச் சமாதானப்படுத்தி அவரவர்களுடைய நிஜஸ்தானங்களுக்கு அனுப்பி, தசரதனைப்பார்த்து, தசரதா! உன் மனோபாவத்தை நானறிவேன் நீ அயோத்தியா சென்று புத்திரகாமேஷ்டி யாகம் செய்வாயாக! உனக்கு மிக பலசாலிகளான நான்கு புத்திரர்கள் பிரப்பார்கள் அவர்களால்துஷ்டசம்மாரமும்,சிஷ்டபரிபாலனமும் நடப்பதாய்ச் சொன்னார். அவ்வார்த்தைகளைக் கேட்டவுடன் தசரதன் சந்தோஷ மடைந்தவனாய் அயோத்தியா சென்று, புத்திரகாமேஷ்டியாகம் செய்து, ராம, லக்ஷ்மண, பரத, சத்துருக் கனனென்கிற நான்கு புத்திரர்களை அடைந்தான். ஸ்ரீராமன் தாடகையை சம்ஹரித்து, அகலிகையினுடைய சாபத்தைப் போக்கி, சிவன் வில்லை முறித்து, சீதாதேவியைக் கலியாணம் செய்துக் கொண்டு, தந்தை வாக்கயத்தைப் பாலிக்க, தம்பியுடன் வனவாசம் சென்று மாரீசனைக் கொன்ற பிறகு, மாயாவேடத்தில் ராவணன் சீதையைக் கொண்டு செல்லும்போது, லோகமாதாவான சீதையை ரக்ஷக்ஷிக்க நினைத்து அக்னிதேவன் இராவணனை சந்தித்து, ஓ ராவணு! இந்த மாயா சீதையை ஏனெடுத்துச் செல்கிறாய்? உனக்கு பயந்து நிஜசீதையை ராமன் என்னிடம் மறைத்து வைத்திருக்கிறான், இவள் மாயசீதை: இவளை விட்டுவிடு; நிஜமான சீதையை உன்னிடம் கொடுப்பேனென்றான். இதுகேட்டு இராவணன் நிஜமான சீதையை விட்டுவிட்டு, அக்கினி பகவான் கொடுத்த மாயாசீதையை எடுத்துச் சென்றான். அக்கினி தேவன் லோகமாதாவான சீதா தேவியை தன் பாரியையான சுவாஹாதேவியிடம் வைத்திருந்தான்.

# பத்மாவதி பூர்வஜன்ம விருத்தாந்தம்

ராவணாசுரன் கொண்டு சென்ற மாயாசிதை வேதவதி யென்கிற ஓர் பதிவிரதை ஒருசமயம் இவள் தவம்செய்யும் போது ராவணன் தன்னை விவாகம் செய்துக்கொள்ளும்படி நிர்பந்தபடுததினன். அப்போது வேதவதி தான் மகா விஷ்ணுவை விவாஹம் செய்துக்கொள்ள தவம்செய்து வருகிறேன், என் தந்தையின் மனோபிப்பிராயததை நிறைவேற்ற வேண்டுமென்று சொன்னாள். இவ்வார்த்தைகளைக் கேட்ட ராவணன் மிக்க கோபம் அடைந்தவனாய், அவளை கற்பழிக்க யெண்ணி தன் கரங்களால் அவள் கூந்தலைப் பிடித்துக்கொண்டான். அப்போது அந்த பரமசாத்வி விஷ்ணுவை நினைத்து தன் பதிவிரதா மஹிமையால் வலக்கரத்தை கூரான கத்தியாக மாற்றி ராவணன் பிடித்திருந்த கேஸங்களை தன் சிரசில் மிகுதியில்லாமல் துண்டித்து விட்டாள் ராவணன் இதைப்பார்த்து ஆச்சரியப்பட்டு ஓ மூடளே; உன் மாயைக்கு பயந்துவிடமாட்டேன் என்று சொல்லி, அவளை பலத்கரிக்கத் தொடங்கினன் அப்போது ராவணனுக்கும் வேதவதிக்கும் மத்தியில் அக்கினிஜுவாலைகள உண்டாயிற்று ராவணன் தன் வஜ்ஜிராயுதத்தால் அந்த ஜுவாலைகளை அணைக்க முயன்ருன் அப்போது அந்த வேதவதி ஒன்றும் செய்யத் தோன்ருமல் ஓ ராவணா உன்னால் நானிந்த அக்கினியில் விழுந்து உயிரை மாய்த்துக் கொள்கிறேன், என்போல் ஸ்திரீயினல் உங்கள் ராக்ஷஸ வம்ஸமே க்ஷீணிக்குமென்று சொல்லி அந்த அக்கினியில் விழுந்தாள் அவளே இந்த்வேதவதியென்கிற மாயசீதை ராவணன் சீதையை கொண்டு சென்ற பிறகு. ராமன் சீதையைகாணமல் பரிதவித்துக் கொண்டு, ஜடாயுவின் மூலம் சீதையின் விருத்தாந்தத்தை தெரிந்துக் கொண்டு, சுக்கிரீவனுடன் சோந்து வாலியைக் கொன்று, வானர சைன்யத்துடன் கலந்து, சமுத்திரத்திற்கு சேதுபந்தனம் செய்து இலங்கைக்குள் பிரவேசித்து, இராவண கும்பகர்ணாதி ராக்ஷஸர்களைக் கொன்று, விபீஷ்ணனுக்கு லங்காபுரியை பட்டாபிஷேகம் செய்து வைத்து, சீதாலக்ஷ்மண சமேதராய் புஷ்பக விமானமேறி பரத்துவாஜ அஸ்

ரமம் சேர்ந்து, தன்னை ஆலிங்களம் செய்துக்கொள்ளக்கினைத்த முனிவர்களைப் பார்த்து, நான் ஏகபத்தினிவிரதமுடையவன்: துவாபரயுகத்தில் உங்களை ஆலிங்கனம் செய்துக்கொள்கிறேனென்று சொல்லி, சீதை சிலகாலம் இலங்கையில் இருந்த காரணத்தால் அக்கினியில் பிரவேசிக்கச் செய்தபோது, அக்கினி பகவான் ஸ்ரீராமனுக்கு இரண்டு சீதைகளை சமர்ப்பித்தான். அப்போது இராமன் சந்தேகித்து, அக்கினி தேவனால் வேதவதியின் விருத்தாந்தத்தையும், சீதையால் அக்கினிதேவன் செய்த மாயையும் தெரிந்துக்கொண்டு கலியுகத்தில் வேதவதியை விவாஹம் செய்துக் கொள்வதாய் அவளுக்கு வரம்கொடுத்து, பரதனின் தீக்ஷைக்ஷயை போக்கி, அயோத்தியை சேர்ந்து பட்டாபிஷேகம் செய்துக்கொண்டு அந்த நகரை பரிபாலித்திருந்து திரேதாயுகம் சமாப்தி காலத்தில் ஸ்ரீராமசந்திரன், லக்ஷ்மணன் சமேதமாய் நிர்யாணை அடைந்து, லக்ஷ்மீ சமேதராய் வைகுண்டம் சேர்ந்தார். திரேதாயுக விருத்தாந்தம் சமாப்தி.

# திரேதாயுகத்தில் அஞ்சனாத்ரி என்ற பெயர் உண்டாகுதல்

கேஸரியின் மனைவி அஞ்சனாதேவி புத்திர சந்ததியிலலாத காரணத்தால், மதங்க மஹரிஷி ஆசிரமம் சென்று தனக்குள்ள குறையைக்கூற, அதற்கு அம்முனிவர் அஞ்சனாதேவியைப் பார்த்து, பம்பா தீரத்தின் கிழக்கு பாகத்தில் அறுபது யோசனை தூரத்தில் சேஷாத்ரி யென்கிற புண்ணிய க்ஷேத்திர முள்ளது, அவ்விடம் ஆதிவராஹமூர்த்தி வசித்து வருகிறார். அவ்விடத்திற்கு இரண்டுமைல் தூரத்தில் ஆகாச கங்கை என்கிற புண்ணிய தீர்த்த முள்ளது நீ அவ்விடம் சென்று அந்த புண்ணிய க்ஷேத்திரத்தில் ஸ்நானம் செய்து பகவானைக் குறித்து தவம்செய்தால், மிக பராக்கிரமசாலியான, பரமபக்தனை புத்திரனைப் பெறுவாய் என்றார்.

அஞ்சனாதேவி முனிவரின் சொல்லைக்கேட்டு, பர்த்தாவின் அனுமதிப் பெற்று சேஷாசலம் அடைந்து, புஷ்கரி

ணியில் ஸ்நானம் செய்து வராஹமூர்த்தியைத் தரிசித்து பிறகு ஆகாசகங்கை கரையடைந்து உண்ணு விரதத்துடன் பகவானைக் குறித்து ஓரேமனதுடன் தவம் செய்துக்கொண்டிருக்கும்பொது, மகாபலவந்தனை வாயுபகவான் பலமொன்றை அவளுக்குகொடுத்தார. அந்தபலத்தை உட்கொண்டதும் அவளுக்கு வாயுசமானபலமுள்ளவனும் பரமபக்தனுமான ஆஞ்ஜனேயனைபுத்திரனைப் பெற்ருள். அக்காரணத்தால் இந்த பர்வதத்திற்கு "அஞ்சனுத்திரி" என்ர பெயர் உண்டாயிற்று.

## கிருஷ்ணவதார மஹிமை

துவாபரே வாசுதேவஸய॥

துவாபரயுகத்தில் இராவண, கும்பகர்ணர்கள், சிசுபால, தந்தவக்ரர்களாய்ப் பிறந்தனர். மாகவிஷ்ணு ராமாவதாரத்தில் ருஷிகளுக்குக்கொடுத்த வரங்களை நிறைவேற்றவும் சிசுபால, தந்தவக்ரர்களை சம்ஹறிக்க, தேவகி வசுதேவர்களுக்கு புத்திரனைப் பிறந்து, பூதகியைக்கொன்று, கம்ஸனை சம்ஹறித்து, கௌரவர்களால் வஞ்சிக்கபட்ட பான்டவர்களின் பக்ஷபாதியாய், துர்யோதனுதிகளால் மானபங்கம் செய்யப்பட்ட திரௌபதிக்கு அக்ஷயமான வஸ்திரமளித்து, வ்னவாசத்தில் பாண்டவர்களை கஷ்டங்களிலிருந்து காப்பாற்றி, அக்ஞாதவாசத்தில் கீசகனைக் கொல்வித்து, பஞ்சபாண்டவர்களுக்காக தூதுசென்று சிசுபால தந்தவக்ரர்களைக் கொன்று, கௌரவர்களைக் கொல்ல, அர்ஜுனனுக்க் கீதோபதேசம் செய்து அர்ஜுனனுல் துரியோதனுதி துஷ்டர்களைக் கொன்று, ஹஸ்தினுபுரத்தை பாண்டவர்களுக்கு பட்டாபிஷேகம் செய்து, பாண்டவர்ள் ராஜ்ய பரிபாலனம் செய்துக் கொண்டிருக்க, ஶ்ரீ கிருஷ்ணன் கோபிகா ஸ்ரீகளுடன் அநேக லீலா விநோதங்கள் செய்து, ராமாவதாரத்தில் ரிஷிகளுக்கு கொடுத்த வரங்களை நிறைவேற்றி வாலிக்கு கொடுத்த வரத்தினுல் வேடனுல் விடப்பட்ட பாணத்தினுல் பூமியில் விழுந்து துக்கிப்பதைக் கணட அர்ஜுனன் துவாரகா வாசிகளுக்குத் தெரிவிக்க, அவர்கள் கிருஷ்ண பரமாத்மாவைக் கண்டு துக்கித்தனர். அப்போது

கிருஷ்ணர் துவாரக வாசகளைப் பார்த்து இன்னும் சில காலத்தில் கலிப்பிரவேசமாகும்; அப்போது நீங்கள் என்னை தியானித்து, என் பாதாரவிந்த மடைவீரென்று சொன்னர். இதற்குள் யசோதாதேவி கிருஷ்ணனைப் பார்த்து, கிருஷ்ணா! உன்னை எத்தனை ஜன்மங்களில் சேவித்தாலும் எனக்கு திருப்தி ஏற்படாமலிருக்கிறது; நீ எவ்விடமிருந்தாலும் உன் சேவையை செய்ய ஆவலுடையவளாயிருக்கிறேனென்றனள் அப்போது கிருஷ்ணன் யசோதாதேவியை பார்த்து, அம்மா! நீ இந்த சரீரத்தை விட்டு வகுளமாலிகையாய் சேஷாசலம் சேர்ந்து அவ்விடம் ஆதிவராஹ ஸ்வாமிக்கு சேவை செய்து வரவும். கலியுகத்தில் நான் அவதரிப்பேனென்று சொல்லி, அர்ஜுனனைப் பார்த்து அர்ஜுனா! நீ இந்த கோபியர்களை சிறிது நேரம் காப்பாற்ற வேண்டும் பிறகு இந்த பதினாறாயிரம் கோபியர்களுக்கும் நிஜஸ்வரூபமுண்டாகும் அதுவரை இவர்களைக் காப்பாற்றுயென்று சொல்லி, கோபியர்களைப் பார்த்து சிறிது நேரத்தில் உங்களுக்கு நிஜஸ்வரூபமுண்டாகும். அதுவரையில் உங்களை அர்ஜுனன் காப்பாற்றுவானென்று சொல்லி, கிருஷ்ணன் தன் சரீரத்தை விட்டு லக்ஷ்மிசமேதராய் வைகுண்டம் சென்றார் சிறிது நேரத்திற்கெல்லாம் கோபிகா ஸ்திரிகளுக்கு அவரவர்களுடைய நிஜஸ்வரூபம் உண்டாயிற்று, கமண்டலங்களையும் கையிலுடையவர்களாய் முனிவர்களெல்லோரும் சேஷாசலம் சேர்ந்து தவம்செய்யச் சென்றனர். இதற்குள் கலிப்பிரவேசம் உண்டாயிற்று தர்மராஜா கலிப்பிரவேசமானதைத் தெரிந்துக்கொண்டு, தன் தம்பிமார்களுடன் திரௌபதியையும் அழைத்துக் கொண்டு, வைகுண்டத்தை நோக்கி செல்லும்போது, திரௌபதியுடன் நான்கு தம்பிமார்களும் வழியிலேயே சரீரங்களை விட்டு ஸ்ரீ விஷ்ணு பாதாரவிந்தத்தை அடைந்தனர். தர்மபுத்திரர் மாத்திரம் தர்மதேவதையுடன் வைகுண்டம் சேர்ந்தார்.

# துவாபர யுகத்தில் இத்த பர்வதத்திற்கு சேஷாசலம் யென்ற பெயர் உண்டாவ தற்கு காரணம்

கிருஷ்ணவதாரம் முடிந்த பிறகு மஹா விஷ்ணு வைகுண்டத்தில் லக்ஷ்மீசமேதராய் ஸன்னித்திருக்கும்போது ஆதிசேஷன் வைகுண்ட வாயிலைக் காத்து வந்தான் வாயுபகவான் ஸ்ரீ விஷ்ணுவை தரிசிக்க. மிக வேகமாய்ப் போய்க் கொண்டிருந்தான். அப்போது ஆதிசேஷன் வாயுதேவனை ஆக்ஷேபித்தான்; வாயுபகவான் ஆதிசேஷனைப் பார்த்து, அவசரகார்யமாய் வைகுண்டவாசனைத் தரிசிக்க போய்க் 'கொண்டிருக்கிறேன்' என்னை ஆக்ஷேபித்தால் கிருதயுகத்தில் துவாரபாலகர்களுக்கு உண்டானதுபோல் உண்டாகுமென்று கடிந்துக்கொண்டார். இந்த வாக்கு வாதங்களைக் கேட்டு லக்ஷ்மி தன் நாதனுக்குத் தெரிவித்தனள். அப்போது ஸ்ரீமந் நாரயணன் வாயுபகவானைப் பார்த்து அந்த கர்வியுடன் உனக்கேன் வாக்குவாதமென்று கேட்டார். அப்போது ஆதிசேஷன் தன் பலத்தை வாயுதேவனிடம் சோல்லிக் கொண்டிருந்தான், மஹாவிஷ்ணு ஆதிசேஷனைப் பார்த்து வெறும் வார்த்தைகளால் பிரயோஜனமில்லை காரியருபத்தில் நிறைவேற்றவேண்டும், நீங்கள் உங்களுடைய பலாபலன்களை நிருபிக்க மேரு புத்திரனை ஆனந்தன் என்ற பர்வதம், மேரு பர்வதத்திற்கு வடக்கு பாகத்திலுள்ளது, அந்த பர்வதத்தை நீ சுற்றிக்கொள்: வாயுதேவன் அப்பர்வதத்தை தன் பலத்தால் பெயர்க்க வேண்டும்; வாயு அப்பர்வதத்தைப் பெயர்த்தால் வாயுவே மிகவும் பலமானவன் இல்லையேல் நீயே பலமுள்ளவனென்று கூறினார்.

அவ்வார்த்தைகளைக் கேட்ட சேஷன் அப்படியே செய்வதாய்ச் சொல்லி, மிக வேகமாய்ச் சென்று அந்த பர்வதத்தைச் சுற்றிக்கொண்டான; வாயுதேவன் அதிக கோபமுடையவராய் அப்பர்வதத்தைப் பெயர்க்க தன் பலத்தையெல்லாம் உபயோகித்தார் ஆனால் பிரயோஜனம் இல்லாமல்

போய்விட்டது. அப்போது வாயு பகவான் மிகவும் கோபமடைந்தவராய் தனக்குள்ள பலம் முழுவதையும் உபயோகித்தார். அப்போது பதினான்கு லோகங்களும் நடுநடுங்கின தேவர்களும் மானவர்களும் திகிலடைந்தனர்கள். ஆனால் ஆதிசேஷன் பர்வதத்தை விடாமல் இருக்கப் பிடித்துக்கொண்டான் அப்போது தேவர்களும் மானவர்களும் வாயு தேவனை அநேகவிதங்களில் பிரார்த்தித்தனர். வாயு அவர்களுடைய வேண்டு கோளைக்காதில் கேளாதிருந்தான். பிறகு அவர்கள் ஆதிசேஷனைப் பார்த்து நீயாகிலும் இச்சமயத்தில் எங்கள் பிரார்த்தனைகளை யேற்று, இந்த பதினான்கு லோகங்களையும் நிலைநிறுத்த வேண்டும்; இல்லாவிட்டால் பிரளயம் தப்பபாது என்று பிரார்த்தித்தனர் அப்போது சேஷன் அவர்களுடைய பிரார்தனைகளைக்கேட்டு தன் தலைகளி லொன்றை நீக்கினான். அப்போது வாயுபகவான் அந்த பர்வதத்தை ஆகாயமார்க்கத்தி லெடுத்துச் செல்லும்போது, மேருபர்வதம் தன் குமாரனுக்கு நேர்ந்த ஆபத்தைக் கண்டு பயந்து வாயுதேவனைப் பிரார்த்தித்தான் வாயுதேவன் தன்னுடைய பிரதிக்ஞை நிறைறிற்வேறென்று சந்தோஷித்து, மேருவினுடைய பிரார்த்தனைகளை நிறைவேற்ற ஆனந்தன் என்ற பர்வதத்தை சுவர்ணமுகி வடக்கு பாகத்தில் ஆதிவராஹ க்ஷேத்திரமான சேஷாசலத்தில் நிதானமாய் வைத்தான். அப்போது தேவர்கள் வாயு தேவனைப பார்த்து, இந்த பர்வதம் சேஷாம்ஸ ஸம்பூதமானது; பகவான் நிவாசத்திற்காக உங்களை இவ்விதமாகத் தூண்டிவிட்டு தன் கார்ரியத்தை நிறைவேற்றிக் கொண்டார்; வீணாக நீங்களிருவரும் விரோதம் கொள்ளக்கூடாதென்று வாயுதேவனையும், ஆதிசேஷனையும் சமாதானப்படுத்தினர். அப்போது வாயுதேவனும் ஆதிசேஷனும் நிஜத்தை தெரிந்து கொண்டவர்களாய் பகவான் செய்த இந்த மஹத்தான காரியத்தை கொண்டாடி அவர்கள் இருவரிம் சந்தோஷத்துடன் அவரவர்களுடைய நிவாஸ ஸ்தானங்களுக்கு சென்றனர் இக்காரணத்தால் துவாபர யுகத்தில் இப்பர்வதத்திற்கு "ஆனந்தாத்ரி" என்று பெயர் உண்டாயிற்று.

# கலியுக வேங்கட நாயக:

கலியுகத்தில் கலிப்பிரவேசித்து மானவர்களுக்கு பக்தி சூன்யமாய் அவரவர்களுடைய குலாசாரப்படி தருமங்களை தவிறி நடந்துவரும் விருத்தாந்தத்தை திருலோக ஸஞ்சாரியான நாரதமுனிவர் தெரிந்துக்கொண்டு தந்தையான பிரம்மாவிடம் சென்று சொல்லுகிறார். விஷ்ணுமூர்த்தி கிருஷ்ணாவதாரம் முடித்துக்கொண்டு, வைகுண்டம்போய் சேர்ந்த பிறகு பூலோகத்தில் கலிபிரவேசித்து மனிதர்களுக்கு பகவான் என்றதை மறைத்து புத்ர, மித்ர பந்துக்களென்னும் மாயையில் பிரவேசிக்கச் செய்து, அவர்களை கடைசியில் நரகத்தில் விழச்செய்து வருவதாய்ச் சொன்னார் பிரம்மா நாரதரின் சொல்லைக்கேட்டு, நாரதா! ஸ்ரீமன் நாராயணன் பூலோகத்திலில்லாவிட்டால் மானவர்கள் பக்தியற்றவர்களாய் மடிவார்கள் பகவானை பூலோகத்தில் வசிக்க ஓர் உபாயம் செய்யென்று சொல்லனார் அப்போது நாரதர் தன் தந்தையின் அனுமதிபெற்று ஸத்யலோகத்தை விட்டு, பூலோகம் சேர்ந்து, ஜான்ஹவிதீரத்தில் யாகங்கள் செய்து வந்த கஸ்யபாதி முனிவர்களைப் பார்த்து, "நீங்கள் செய்து வரும் யாகத்தின் பலனைப் பெறும் தெய்வம் யார்?" என்று கேட்டார்; அவர்கள் அதைகேட்டு சந்தேக முற்றவர்களாய் ஏதும்சொல்லத் தோன்றமல் விழித்தனர் அப்போது நாரதர் அம்முனிவர்களைப் பார்த்து, திருமூர்த்திகளில் ஸத்வகுண ஸம்பன்னரும், ஸகல பூதங்களுக்கும் ஆதாரமானவரும், ஸத்வகுணங்களுடன் மோக்ஷப்பிரதமான பகவான் யார் யென்று தெரிந்து நீங்கள் செய்யும் யாகபலத்தை அவருக்கு சமர்பிக்கும்படிச் சொல்லிப் புறப்பட்டுச் சென்றார்.



# பிருகுரிஷி திருமூர்த்திகளை பரீக்ஷிக்கும்போது விஷ்ணுவின் மார்பில் உதைத்தல்

கஸ்யபாதி முனிவர்கள் திருமூர்த்திகளில் ஸத்வகுண ஸம்பன்னர் யாரோ தெரிந்துவர பிருகு மஹரிஷியை அனுப்ப, பிருகு உடனே புறப்பட்டு ஸத்யலோகம் சேர்ந்து அங்கு சதுர்முகன் பத்மாஸனத்தில் பிரகாசித்திருக்க, வேத சாஸ்திரங்களை சாவித்ரி, காயத்ரி, ஸரஸ்வதி, அஷ்டதிக் பாலகர்கள் சேவித்துவந்தனர். அப்போது பிருகு முனிவர் சதுர்முகனுக்கு சாஷ்டாங்க தண்டங்கள் சமர்பிக்க, சதுர் முகன் அதைப் பார்க்காமல் பராமுகமாய் யிருந்தான். அப்போது பிருகு அந்த பிரம்ம சபையில் ஆஸனத்தில் வீற்றிருந்தார். பிறகு சதுர்முகன் கண் திறந்து பார்க்க பிருகு தன் அனுமதி யில்லாமல் சுகாஸனத்தில் வீற்றிருக்கக் கண்டு ஒன்றும் பேசாமலிருந்தார். ஆனதால் பிரம்மா உலகத்தில் பூஜிக்கத் தகுதியேற்றவ னென்று தெரிந்துக் கொண்டு ஸத்யலோகம்விட்டு, கைலாஸத்திற்குப் போய் சேர்ந்தார். அப்போது சங்கரன் காமபீடிதராய் பார்வதி யுடன் ஸரஸமாய் பிடித்துக் கொண்டிருந்தார். அப்போது அவ்விடம்வந்த பிருகு ரிஷியைக் கண்ணெடுத்தும் பார்க்க வில்லை. பார்வதி பிருகுவைப் பார்த்து லஜ்ஜையுடன், பிருகு வந்ததை தன் கணவனுக்குத் தெரிவித்து, தன்னை விடும்படி சங்கரனைக் கோரினாள். சங்கரன் பார்வதியைவிட்டு மிக கோபமுடன் பிருகுவை சிக்ஷிக்கப் பார்த்தார், அப்போது பிருகு சிவனுக்கு பூலோகத்ல் அங்கபூஜை யில்லாமல் சாபம் கொடுத்து கைலாசத்தைவிட்டு வைகுண்டம்போய்ச் சேர்ந்தார் அச்சமயத்தில் ஸ்ரீமந்நாராயனன் லக்ஷ்மீ சமேதராய் ஹம்ஸதூலிகையில் ஸயனித்திருந்தார் ஸயனித் திருந்த பகவானைபார்த்து பிருகு தன் பாதத்தால் பகவானின் வக்ஷஸ்தலத்தில் (மார்பின்மீது) உதைத்தார். அப்போது விஷ்ணு உடனே எழுந்து பிருகு ரிஷியைப் பார்த்து அவர்

பாதங்களை பிடித்துக்கொண்டு, தங்கள் வரவை கவனிக்காமல் ஸயனித் திருந்தற்கு மன்னிக்க வேண்டுமென்று பிருகுவின் காலை ஒத்தத் தொடங்கினர். அப்போது ஸ்ரீமந் நாராயணனின் வக்ஷஸ்தலத்தில் (ஹிருதயத்தில்) வசித்து வந்த லக்ஷ்மீதேவி, பகவானுக்கு பக்தர்கள் மேலுள்ள அன்பை தெரிந்துகொள்ளாமல் கோபித்துக்கொண்டு, தூரமாய் சென்று நின்றுகொண்டிருந்தாள் பிருகு முனிவர் ஸ்ரீமந்நாராயணனின் பாதங்களுக்கு தண்டப்பிரணுமங்கள் செய்து, ஓ தேவா! பிரம்ம மானஸ புத்திரனை நாரத முனிவர் ஜான் ஹவீ தீரத்தில் யாகங்களசெய்துவந்த கஸ்யபர் முதலான முனிவர்களைப் பார்த்து, இந்த யாகத்தின் பலனை யாருக்கு கொடுப்பீர்களென்று வினவ, அப்போது கஸ்யபர் முதலான முனிவர்கள் சந்தேகத்துடன் வீற்றிருக்க அதைக்கண்டு நாரதமுனிவர் திருமூர்த்திகளில் ஸத்வ குண சம்பன்னர் யாரோ தெரிந்துக்கொண்டு, யாகத்தின் பலனை அவருக்கு சமர்பிக்கும்படி சொல்லி புறப்பட்டுச் சென்ருர் அவ்வார்த்தைகளைக்கேட்டு கஸ்யபர் முதலான முனிவர்கள் என்னைப்பார்த்து திருமூர்த்திகளில் ஸத்வகுண ஸம்பன்னரை அறிந்துவர அனுப்பினர். நான் ஸத்ய லோகம் சேர்ந்து பிரம்மதேவனைப் பரீக்ஷித்து, கைலாஸத்திற்குச் சென்று சங்கரனை பரீக்ஷித்து, கடைசியில் வைகுண்டவாசனை தங்களை பரீக்ஷித்ததில் ஸகலகுண ஸம்பன்னும் பக்தி முக்தி பிரதானனும், ஸகல பூதங்களுக்கும் ஆதாரமானவனும், திருமூர்த்திகளுக்கும் ஆதாரமானவனும், ஸகலத்திற்கும் ஆதாரமாய், ஸகல புவனங்களுக்கும் கர்த்தாவாய், பக்தர்களின் மனோபீஷ்டங்களை நிறைவேற்றும் ஸத்வ குண ஸம்பன்னனென்று தெரிந்துக்கொண்டேன். இதில் என் கர்த்தவ்யமில்லை யென்று அநேகவிதங்களில் விஷ்ணுவைப் பிரார்தித்தார். உடனே விஷ்ணு பிருகுவை ஆலிங்கனம் செய்துக்கொண்டு ஆசீர்வதித்து அனுப்பினர். பிருகு பரமானந்தமடைந்தவராய் ஜான்ஹவீதீரம் சேர்ந்து, அவ்விடமுள்ள கஸ்யர் முதலான முனிவர்களைப் பார்த்து நடந்த விருத்தாந்தத்தைத் தெரிவித்தார் அதைக்கேட்டு அம்முனிவர்கள் சந்தோஷமுற்றவர்களாய் யகஞ பலத்தை ஸத்வகுண ஸம்பன்னரான ஸ்ரீ மஹாவிஷ்ணுக்கு ஸமர்பித்து ஸந்துஷ்டரானர்கள்.

# ஸ்ரீ லக்ஷ்மி விஷ்ணுவின்மேல் கோபம்கொண்டு கொல்லாபுரம் சேருதல்

மஹா விஷ்ணுவை பிருகுரிஷி பரீக்ஷிக்கும்போது பகவானின் வக்ஷஸ்தலத்தில் நிவசிக்கும் லக்ஷ்மி, தனக்கு உண்டான அவமானத்தைச் சகிக்காமல் கணவனைப்பார்த்து பிராணவல்லபா! துஷ்டகாரியம் செய்த பிருகுவை சிக்ஷிக்காமல் அவரை ஆதரித்ததினால் எனக்கு உண்டான அவமானத்தைச் சகிக்கமாட்டேன், நான் வைகுண்டத்தைவிட்டு பூலோகம் போய் உன் திருவடிகளை தியானித்து காலம் கழிப்பேனென்று சொன்னாள் இப்படி கோபத்தால் துடிக்கும் லக்ஷ்மியைப் பார்த்து, ஓ கமலாக்ஷீ! பிருகு என் வக்ஷஸ்தலத்தில் உதைத்தால் மிகவும் சுபகரமாயிற்று, அதற்கு நீ கோபிக்க வேண்டியதில்லை யென்று சொன்னார். இவ் வார்த்தைகளை கேட்டு லக்ஷ்மி ஸ்ரீநிவாசனைப் பார்த்து, புருஷோத்தமா! நீ சராசரங்களைப் பரிபாலித்துக்கொண்டு, ஆத்மாகளுக்கு ஆத்மாவாய் திருமூர்த்திகளுக்கும் ஆதி காரணமாய் பதினான்கு லோகங்களையும் உன் குக்ஷியில் வைத்துக்கொண்டு ஸர்வ காலங்களிலும் பக்தர்களுக்கு ஆப்தனாய், அவர்களுக்கு மோக்ஷசங்களை கொடுத்து பரிபாலித்துவரும் பரமாதமாவான உம்மை பிருகு காலால் உதைக்க அதற்கு நீங்கள் ஸம்மதித்து, அவரை ஆலிங்கனம் செய்துக்கொண்டு ஆசீர்வதித்து அனுப்பினீர். அந்த வக்ஷத்தில் வசித்துவரும் எனக்குண்டான அவமானத்தை தாங்கள் பொருட்படுத்தவில்லை ஆனதால் எனக்கு இவ்விடமிருக்க இச்சையில்லையென்று கோபமாய்ச் சொன்னாள். அப்போது பரந்தாமன் ஸ்ரீ லக்ஷ்மியைப் பார்த்து பிருகுவை யாரென்று நினைத்தாய், அவன் உன் குமாரனாவான் அவன் காலால் உதைத்த மாத்திரத்தில் நீ வைகுண்டம் விட்டு போவது பலர் உன்னை நிந்திப்பார்கள், ஆனதால் நீ போகக்கூடாதென்று சொன்னார் அவ்வார்த்தைகளைக் கேட்ட லக்ஷ்மி மிகவும் கோபத்துடன் தன் பிராணநாதனை விட்டு

போக வேண்டுமென்ற பயத்தாலும், தன் நாதன்மேலுள்ள பிரேமையாலும் கணவனைப் பார்த்து; நீங்கள் ஸத்வகுண ஸம்பன்னரென்று பிருகு உங்களை புகழ்ந்ததால் அவரை மன்னித்ததினால், பசுபாலகனும் அடிக்கவல்லவனுவான் பூமிவாசிகள் உம்மை கல்லால் அடிக்க வல்லவராவார். மிலேச்சர்கள் உங்களை மதிக்காமல் உங்கள் குணங்களைக் கைபற்றுவார். எனக்கு அவமானத்தை உண்டாக்கிய பிராம்மண வம்ஸத்தார் பிச்சக்காரர்களாய், தன் மனைவி, பிள்ளைகளை போஷிப்பார்கள் நித்ய கர்மங்களை விட்டு நீசர்களை அனுஸருவார்கள்; ஏழைகளாய் ஜீவனத்திற்கு வித்தைகளை விற்று ஜீவிப்பார்கள் என்று சொல்லி; வைகுண்டத்தை விட்டு வேங்கடாசலத்திற்கு சுமார் இருபதுயோசனை தூரத்திலுள்ள கரவீரபுரம் என்கிற கொல்லாபுரத்தில் போய்ச் சேர்ந்தாள் அப்போது லக்ஷ்மிவல்லபன் தன் மனைவி விட்டுச்சென்ற மனோவியாகூலத்தை தாங்காமல் இப்படியாக யோசிக்கலானர்: லக்ஷ்மியில்லாத வைகுண்டம் சௌந்தர்ய மற்றதாயும், லக்ஷ்மிகடாக்ஷமில்லாதவனை யெல்லோரும் நிந்திப்பார்களென்றும், லக்ஷ்மி இல்லாதிருந்தால் இந்த வைகுண்டம், சௌந்தர்யமற்று, போக பாக்கியங்கள் நசித்துவிடும. லக்ஷ்மி பூலோகத்தில் போய் சேர்ந்து, தன்னை ஆராதிப்பவர்களுக்கு தனரூபமாயும், தான்ய ரூபமாயும், தனகனக வஸ்துவாஹன ரூபங்களிலும், அவர்களுக்கு ஸர்வ சௌகர்யங்களையும் கொடுத்து மூடனை ராஜனாக்கி; ராஜனை மூடனாக்கி. மூடனை முக்தனாக்கி கடைசியில் கர்வமுள்ளவனாக்கி, நீசனானாலும் தனமுள்ளவனே பக்தனென்று, சொல்வித்து அவனையே பகவானென்று தன மதத்தால் கர்வமுள்ளவனாய் துரோஹியாய், குடிவெறியனாய், மாம்சாஹாரனாய் குருத்துரோஹியாய், தாய் தந்தைகளை பூஜிக்காமல், பெரியோர்களையும், குருதெய்வங்களையும் நியாய அநியாயங்களையும் மறந்து, குரூரர்களாய் என் பக்தர்களை லக்ஷியம் செய்யாமல் மற்றும் ஆதரிக்காமல் கடைசியில் பாபிகளாய் நரகவேதனை யனுபவிப்பார்களே யென்று யோசிக்கலானர்.



# ஸ்ரீ விஷ்ணு வைகுண்டத்தை விட்டு ஓர் புற்றில் வசித்தல்

ஸ்ரீமந் நாராயணன் வைகுண்டத்தை விட்டு பூலோகத்திலுள்ள காடு மலை வனம் வனாந்திரங்களைச் சுற்றி தன் நிவாஸத்திற்கு யோக்கியமானதும், பவித்திரமானதாகவும் ஓரிடத்தை தேடிக்கொண்டு தனிமையாய், திரிந்து வந்தார். இப்படி திரிந்து, கங்கா நதிக்கு தெற்கில் மூன்றுயோஜனை தூரத்தில, வர்ணமுகிக்கு வடக்கில் மூன்று யோஜனை அகலமும் முப்பதுயோஜனைகளை யுள்ளதும், தலைபாகத்தில் வேங்கடாத்ரியும் மத்திய பாகத்தில் நரஸிம்மாத்ரியும், கடைசிபாகம் ஸ்ரீசைலமும் உடையதாய், பிரம்மாதி தேவர்களுக்கும் மஹா ரிஷிகளுக்கும் யோக்கியமாய், மிகவும் கவர்ச்சிகரமான தபோ வனங்களுடனும், பவித்திரமான புண்ணிய தீர்த்தங்களுடனும் நிறைந்த ஆதிவராஹ க்ஷேத்திரமென்ற சேஷாசலம் சேர்ந்து, க்ஷேத்திர மூர்த்தியாண ஆதிவராஹ சுவாமியிடம் சென்று தன் நிவாஸத்திற்காக ஸ்தலத்தை வேண்டினர். அப்போது ஆதிவராஹமூர்த்தி மஹாவிஷ்ணுவைப் பார்த்துச் சொல்லுகிறார்: ஏழைக்கு ஆசைகாட்டக்கூடாது பலவானுக்கு இடம்கொடுக்க லாகாது; என்ற பெரியோர் சொல்லியிருப்பதால் உன் விருத்தாந்தத்தை விபரமாய் தெரியபடுத்தினாலொழிய உனக்கு இடம் கொடுப்பதற்கு ஸந்தேகிக்க வேண்டியுள்ள ஆனதால் உன் விருத்தாந்தத்தை விபரமாம் சொல்லென்று வினவ, அப்போதுவிஷ்ணு நடந்த விஷயத்தை விபரமாய் வராஹமூர்த்தியிடம் சொன்னார். ஆதிவராஹ மூர்த்தி விஷ்ணுவைப் பார்த்து, நாமிருவரும் ஓரே அம்சமுடையவர்களானதால் எனக்குள்ள ஸர்வமும் உனக்கு அர்பணம் செய்கிறேன் உன் னிஷ்டம்போல் நடக்கும்படி சொல்லி, தனக்குள்ள சர்வமும் வினயமாய் சமர்பித்தார். அப்போது பகவான் ஸந்தோஷித்து நான் தன்யனானேன் நீ இந்த க்ஷேத்திரததிற்கு அதிபதியானதால் கலியுகத்தில் என்னைப் பார்க்கவரும் பக்தர்கள் முதலில் உன்னை ஆராதித்து, தரிசித்து பிறகு என்னை ஆராதித்து, தரிசிப்பார்களென்று சொன்னார், அவ்வார்த்தைகளைக்

கேட்டு வரஹாமூர்த்தி சந்தோஷமுற்றவராய் இருவரும் பக்தர்களுக்கு தரிசனம் கொடுத்து ஆதரித்து வந்தனர்.

பகவான் சேஷாசலத்தில் இருக்கும் விஷயத்தை சதுர் முகன் தெரிந்துக்கொண்டு, புஷ்கரணி தெற்குபாகத்தில் தசரதன், வசுதேவர்கள் சுவயமாத்திற்கு வரும்படி ஒரு திந்திரிணி விருக்ஷத்தை நிர்மித்து அந்த விருக்ஷத்தின் கீழ் கௌசல்யா, தேவகி தேவியின் அம்ஸமாய் ஒரு புற்றையும் நிர்மித்தார் மஹாவிஷ்ணு சேஷாத்ரியில் சுற்றிக்கொண் டிருக்கும்போது ஒருநாள் பிரம்மதேவனால் நிர்மிக்கப்பட்ட திந்திரிணி விருக்ஷமும், அந்த விருக்ஷத்தின் கீழுள்ள புற்றை யும் பகவான் பார்த்தார். அந்த விருக்ஷத்தையும் புற்றையும் பார்த்தவுடன் திரேதாயுகத்தில் ராமாவதாரமும் துவாபர யுகத்தில் கிருஷ்ணாவதாரமும் நினைவிற்குவந்தது அப்போது பகவான் புற்றின்சமீபம் சென்று கொண்டிருக்கும் போது அந்த புற்றிலிருந்து கருட, கந்தர்வ, கின்னர, கிம்புருஷர்க ளால் தான் கேட்டுவந்த வீணை முதலான வாத்தியங்களின் நாதங்கள் கேட்டது போலிருந்தது, அந்த மதுரவாத்திய கோஷங்களைக் காதாரக் கேட்டு அந்த புற்றின் சமீபம்சென்று பார்க்க புற்றின் முகத்துவாரம் சோபானம்போல் காணப் பட்டது அந்த மார்க்கமாய் புற்றில் பிரவேசித்து, புற்றினுள் சென்று பார்த்து இப்படியாக யோசிக்கலானார். பூர்வம் தனக்கு வைகுண்டத்தில் படுக்கையாயிருந்த ஆதிசேஷனே யென்று நினைத்து சந்தோஷித்து, அந்த புற்றே தனக்கு வாஸஸ்தலமாய் ஏற்படுத்திக் கொண்டு அவ்விடம் வசிக்க லானார். இப்படி புற்றில் வசித்துவரும் விஷ்ணுவை, பூலோ கத்தில் பிரத்தியக்ஷ செய்வமாய் பக்தர்களின் பாபங்களை போக்கி லோககல்யாணமாக்க நினைத்தவராய் சதுர்முகன் கைலாஸம்சென்று சங்கரனைப் பார்த்து சொல்லுகிறார். ஸ்ரீமந்நாராயணன் வைகுண்டத்தைவிட்டு பூலோகத்தில் ஆதிவராஹ க்ஷேத்திரமான சேஷாத்ரியில் புற்றினுள் வசித்து வருகிறார்; அவரை திருப்திசெய்ய உன்னிடம் வந்தேனென்று சொல்ல, சங்கரன் அதற்கு சம்மதித்தார்.

# லக்ஷ்மி பசு, கன்றுகளை சோழராஜனுக்கு விற்றல்

சங்கரன், பிரம்மதேவனிருவம் புறப்பட்டுக் கொல்லா புரத்தில் வசித்துவரும் லக்ஷ்மியிடம் போய் அம்மா! நீ வைகுண்டத்தைவிட்டு வந்தவுடன் மஹாவிஷ்ணுவும் வைகுண்டததைவிட்டு அரண்யங்களில் சுற்றிக்கொண்டு, அநேககஷ்டங்களை அனுபவித்துக் கொண்டு கடைசியில் சேஷாத்ரியில் ஒரு புற்றில் வசித்துக்கொண்டு, அன்ன ஆகாரமில்லாமல் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார் அவரை நாம் எப்படியாகிலும் திருப்தி செய்ய வேண்டுமென்று நினைத்து உன்னிடம் வந்தோமென்று சொன்னார்கள். அப்போது லக்ஷ்மி அவர்களைப் பார்த்து நான் சிலகாலம் கொல்லாபுரத்தில் வசிக்க காரணங்களிருப்பதினால் இவ்விடம் வசித்து வருகிறேனே தவிர வேறொன்றுமில்லை, நீங்கள் அவரை திருப்திசெய்ய எண்ணினால் உங்களுக்கு என்னாலாக வேண்டிய சகாயம் செய்வேன், உங்களுடைய அபிப்பிராயங்களை தெரிவியுங்களென்று கேட்டனள். அவ்வார்த்தைகளைக் கெட்டு அவர்கள் லக்ஷ்மியைப் பார்த்து, அம்மா! நாங்களிருவரும் பசு, கன்றுகளாய் மாறுகிறோம், நீ கோபிய ஸ்திரீயாக மாறி இந்த பசு கன்றுகளை சோழராஜனுக்கு விற்க வேண்டுமென்று கூறினர் அதற்கு சம்மதித்து லக்ஷ்மீ கோபிய ஸ்திரீயாகவும், பிரம்மருத்திரர்கள் பசு கன்றுகளாகவும் மாறினர். அப்போது இடைச்சி ரூபத்திலுள்ள மஹாலக்ஷ்மி அந்த பசு கன்றுகளை ஓட்டிக்கொண்டு சோழராஜனுடைய அரண்மனையிருக்கும் சந்திரகிரியை சேர்ந்து, பசு கன்றுகளை சோழராஜனுக்கு விற்று, தன் நிவாசஸ்தானமான கொல்லாபுரம் போய்ச் சேர்ந்தாள்.

சோழராஜன் அந்த பசு கன்றுகளை கோபாலகனிடம் ஒப்படைத்து தன் பசுக்களுடன் சேர்த்துக் மேய்க்க உத்திரவிட்டான் உடனே கோபாலகன் தன் வசமுள்ள இரண்டாயிரம் பசுக்களுடன் சேர்த்துக் கொண்டான் அந்த பசு பிரதிதினமும் பசுக்களுடன் சேர்ந்து சேஷாத்ரிக்குச் சென்று

புற்றில் வசித்துவரும் மஹாவிஷ்ணுவிற்கு பால்கொடுத்து வந்தது. இப்படி சிலகாலம் கடந்தபிறகு ஒருநாள் சோழ ராஜனின் மனைவி பசுவினிடம பால்லாததால் கோபாலகனைப் பார்த்து, நீ இந்த பசுவின் பாலைகுடித்துவிடுகிறாயா வென்று கோபமாய் கேட்டாள்; அப்போது கோபாலகன் பயமுற்றவனாய், அம்மா! நான் அந்த பசுவின் பாலை குடிக்கவில்லை. நான் பிரதி தினமும் பசுக்களுடன் சேஷாசலம் சென்று பசுக்களை சிரத்தையாய் மேய்த்து வருகிறேன், நான் இந்த பசுவின் பாலை குடிக்கவில்லையென்று சொன்னான் அப்போது சோழராஜனின் மனைவி கோபாலகனைப்பார்த்து உன் வார்த்தைகளை நம்பமாட்டேன், நாளைமுதல் பசுவிடம் பாலில்லாவிட்டால் உன்னை கடுமையாய் தண்டிப்பேனென்று கூறினாள். அவ்வார்த்தைகளைக் கேட்டு கோபாலகன் பயத்துடன் அப்படியேயென்று கூறி புறப்பட்டுச் சென்றான்.

## கோபாலகன் கோடலியால் ஸ்ரீநிவாசனை அடித்தல்; சோழ ராஜனுக்கு சாபம்

கோபாலகன் மறுநாள் காலை வழக்கம்போல் பசுக்களை ஓட்டிக்கொண்டு; கோடலியை பிடித்துக்கொண்டு மந்தையுடன் சென்றான். அன்று பசுக்களும் வழக்கம்போல் சேஷாத்ரி பர்வதமேறிச் சென்றுக் கொண்டிருந்தன. இப்படி போய்க்கொண்டிருக்கும்போது, இந்த பசு மாத்திரம் கொஞ்ச தூரம் பசுக்களுடன் சென்று பிறகு அவைகளை விட்டு, பிரிந்து, ஸ்ரீநிவாசன் வசித்துவந்த புற்றினிடம் சென்று வழக்கம்போல் பகவானுக்கு பால் கொடுத்துக் கொண்டிருந்தது. கோபாலகன் அதைப்பார்த்து மிக கோபாவேசத்துடன் தன் கையிலுள்ள கோடலியால் பசுவைக் கொல்லவந்தான், கருணாமூர்த்தியான பகவான் அந்த பசுவை ரக்ஷிக்க யெண்ணியவராய் வல்மீகத்திலிருந்து (புற்றிலிருந்து) வெளியேவர தன் தலையை வெளியே யெடுத்

தார். அச்சமயம் கோபாலகன் அடித்த கோடலியின் அடி ஸ்ரீனிவாசனின் தலையில்பட இரத்தம் பிரவாஹமாய் வந்தது கோபாலகன் அந்த இரத்தப் பிரவாஹத்தைப் பார்த்து பூமியின்மேல் விழுந்து மூர்ச்சித்தான். அப்போது அந்த பசு மிகவும் துக்கத்துடன் புற்றைவிட்டு தன்மேல் விழுந்த இரத்தக் கரைகளுடன் புறப்பட்டுச் சோழராஜனின் சபையைச் சேர்ந்து பூமியின்மேல் விழுந்து புரண்டு துக்கிற்றது. அதைக்கண்டு அச்சபையோரெல்லாம் திகிலடைந்து, இந்த பசு இரத்தக் கரைகளுடன் இச்சபையைச் சேர்ந்து துக்கமடைய காரணமென்ன வென்று, ஒருவரையொருவர் பார்த்து யோசித்துக் கொண்டிருந்தனர். இதற்குள் சோழராஜன் ஒருசேவகனைக் கூப்பிட்டு நீ இந்த பசுவுடன் சென்று காட்டில் என்ன நடந்ததோ தெரிந்துவா வென்று சொன்னார். அப்போது அந்த பசு சோழராஜனின் வார்த்தைகளைக்கேட்டு, வேகமாய் புறப்பட்டுச் சேஷாசலம் ஏறத் தொடங்கிற்று, சேவகனும் பசுவின் பின் தொடர்ந்தான் சோழராஜன் தன் சபையிலுள்ள மந்த்ரிகளைப் பார்த்து, இந்த பசு பசுக்களை விட்டு தனியாய் இரத்தக் கரைகளுடன் நம்முடைய சபைக்கு வந்து சிந்திக்க காரணம் யாது வென்று யோசிக்கலாயினர். பசுவுடன் சேவகன் சேஷாத்ரி பர்வதம் சேர்ந்து, புற்றினிடம் விழுந்துள்ள கோபாலகனையும், புற்றிலிருந்து இரத்தம் பிரவஹிப்பதையும் பார்த்து பயமுற்றவனாய் ஓர் க்ஷணத்தில் சோழராஜன் சபையைச் சேர்ந்து, அவ்விடம் நடந்துள்ள விஷயங்களை சோழராஜனுக்குத் தெரிவித்தான் உடனே ராஜன் பல்லகின்மீது புறப்பட்டு சேஷாத்ரிசேர்ந்து புற்றினிடம் மூர்ச்சித்து விழுந்திருக்கும் கோபாலகனையும், புற்றிலிருந்து பிரவஹிக்கும் இரத்தத்தையும்பார்த்து ஒன்றும் செய்யத்தோன்றாதவனாய் சிறிது நேரம் யோசித்து, இந்த அரண்யத்தில் இப்படி கோரமாய் நடக்க காரணம் யாது? இந்த புற்றிலிருந்து இரத்தம் பிரவஹிக்கும் காரணமும் தெரியவில்லையே! நான் என்ன செய்வேன் இந்த பாபகாரியத்தை செய்த துர்மார்க்கன் யாரோ? தெரியவில்லையே, என்று கதறினான். இதற்குள்

புற்றினுள்ளிருந்த பரமாத்மா இரத்த காயத்துடன் புற்றிலிருந்து வெளியே வந்து சோழராஜனைப் பார்த்து நீ பாபாத்மாவாய் என்னை உன் சேவகனால் அடிக்கவைத்தாய்; உன் இராஜ்ஜியத்தில் பிரஜைகள் செய்யும் பாபங்களுக்கு நீயே கடமைபட்டவன்; நான் வைகுண்டத்தை விட்டு தனிமையாய் இந்த அரண்யத்தில் புற்றில் வசித்துவர, என்னை உன் கோபாலகன் கோடலியால் அடித்து காயமுண்டாக்கினான், பிரஜைகள் செய்யும் பாபங்களை பிரஜாபாலகர்கள் அனுபவிக்க வேண்டியது, ஆனதால நீ பிசாசரூப மாகக் கடவாய் என்று சாபம் கொடுத்தார். அப்போது சோழ ராஜன் விஷ்ணுவின் பாதங்களின்மேல் விழுந்து அநேக விதங்களில் பிரார்த்தித்தான், அப்போது பகவான் கருணையுடையவராய் சோழராஜனைப் பார்த்து என் பக்தர்களுக்கு கஷ்டமேற்பட்டால் நான் சகிக்க மாட்டேன் நான் கொடுத்த சாபம் வீணாகாது, நீ பிசாரூபமாய் சில காலம் அனுபவித்து பிறகு இந்த சரீரத்தை விட்டு சுதர்மனின் மகனாய்ப் பிறந்து, ஆகாசராஜனாய் ராஜ்யபரிபாலனம்செய்து, உன் புதல்வியை எனக்கு கன்னிகாதானம் செய்து கிருதார்த்தனாவாயென்று சொல்லி சாபத்தைக் குறைத்தார் சோழராஜன் பகவானை நமஸ்கரித்து கோபாலகனை காக்கவேண்டுமென்று கைகூப்பி துதித்தான். இதற்குள் கோபாலகன் மூர்ச்சை தெளிந்து குருடனாய் பகவானுக்கு நமஸ்கரித்து தன்னை மனிக்கும்படி அநேகவிதங்களில் பிரார்த்தித்தான். பகவான் கோபாலகனைப் பார்த்து நீ இந்த அரண்யத்தில் சிலகாலம் குருடனாய் சஞ்சரிப்பாயாக! நான் இந்த க்ஷேத்திரத்தில் அர்ச்சாவதாரமெடுப்பேன்; அப்போது நீ என்னை தரிசித்தால உனக்கு நேத்திரங்கள் வரும். அது முதல் என்னை பூஜித்து கிருதார்த்தனாவாய், நான் வைகுண்டத்தைவிட்டு, புற்றில் வசித்து வந்து முதல் தரிசனம் உனக்கு கொடுத்ததினால் அர்ச்சாவதாரம் எடுத்தது முதல் உன் வம்ஸத்தாருக்கு கலியுகத்தில் முதல் தரிசனம் கொடுப்பதாய் வரம் கொடுத்தார். சோழ ராஜன் பிசாசரூபம் பெற்று ஸதா பகவானை தியானித்துக் கொண்டு, சில காலத்திற்கு சுதர்மனின் மகனாய்ப் பிறந்தான். கோபாலகன் குருடனாய் சதா பகவானை துதித்து காலங்கழித்து வந்தான்.

# ஸ்ரீனிவாசனை வகுளாதேவி சந்தித்தல்

ஸ்ரீனிவாசன் தனக்குண்டான காயத்துடன் புற்றில் வசித்துவர, பிருஹஸ்பதி புற்றிலுள்ள பரமாத்வாவைப் பார்த்து அவருக்கு யேற்பட்ட காயத்தை ஆற்ற ஒரு ஔஷதத்தைச் சொல்லி புறபட்டுச் சென்றார். அப்போது ஸ்ரீனிவாசன் பிருஹஸ்பதி சொன்ன வனமூலிகையை தேடிச் சென்றார். அச்சமயம் வராஹமூர்த்திக்கு பணிவிடை செய்துவந்த வகுளாதேவி, இரத்த காயங்களுடன் செல்லும் ஸ்ரீனிவாசனைப் பார்த்து, குழந்தாய்! நீயார்? இந்த காட்டில் இரத்தகாயங்களுடன் திரியக் காரணம் யாது? யாரால் இந்த இரத்தகாய மேற்பட்டது? என்று கேட்டுக்கொண்டே ஸ்ரீனிவாசனின் சமீபம் சென்று தன் கமண்டலத்திலுள்ள ஜலத்தால் பகவானின் முகத்தை சுத்தப்படுத்தி தகுந்த ஔஷத்தம் கொண்டுவந்து காயத்திற்கு போட்டு, ஆகாரத்தையும் உண்ணச் செய்து, உன்னுடைய விருத்தாந்தத்தை எனக்குத் தெரியபடுத்தென்று வகுளாதேவி ஸ்ரீனிவாசனைக் கேட்டனள். அப்போது பரந்தாமன் அவளுடைய உதார சுபாவம் பார்த்து வகுளாதேவியிடம் அம்மா! நான் ஒரு அனாதை, அநேகஅவதாரங்களெடுத்து பலகஷ்டங்களை அனுபவித்து கடைசியில் இந்த அரண்யத்தில் வசித்துவரும்போது ஓர் கோபாலகனால் இந்த அரண்யத்தில் திரிந்துக்கொண்டிருக்கிறேன் என்று சொன்னார் அவ்வார்த்தைகளைக் கேட்டதும் வகுளாதேவி துவாபரயுகத்தில் ஸ்ரீ கிருஷ்ணன் தனக்குக் கொடுத்த வரத்தை நினைத்துக் கொண்டு, குமாரா! நானும் ஓர் அனாதை; எனக்கு சந்ததியற்று என்னை ஆதரிப்பாரில்லாத நானொரு அனாதைத்தாய். இந்த க்ஷேத்திரமூர்த்தியான வராஹமூர்த்திக்கு பணிவிடை செய்துக்கொண்டு, அவரை அனுகி இவ்விடம் காலம்கழித்து வருகிறேன். நீ எனக்கு கிடைத்ததால் இந்த அனாதை தனயனைப் பெற்ற தாய்போல் ஆனந்தமுடையளாவேன். உன்னை என் மகனைப்போல் நினைத்திருக்கிறேன். நீ இவ்விடமே வசித்து வரவேண்டும், இவ்விடத்தை விட்டு வேறெங்கும் செல்லக்கூடாதென்று

சொன்னாள். அப்போது ஸ்ரீனிவாசன் வகுளாதேவியைப் பார்த்து அம்மா! அந்த திந்திரிணி விருக்ஷத்தின் கீழ் ஓர் புற்றிருக்கிறது; அந்த புற்றினுள் வசித்துவருகிறேன் நீ ஒரு தடவை அந்த புற்றை பார்க்க வரவேண்டுமென்று கூபிட்டார். உடனே வகுளாதேவி சந்தோஷித்து ஸ்ரீனிவாசனுடன் புற்றினிடம் சென்று அந்த புற்றைப் பார்த்து சந்தோஷமுடையவளாய், தன்னுடைய ஜன்ம சாபல்யமடைந்தேனென்று நினைத்துக்கொண்டு, கிருஷ்ணவதாரத்தில் யசோதாதேவியாய், உன்னுடைய சேவை செய்தேன்; இந்த ஜன்மத்திலும் அந்த பரந்தாமனின் சேவைகிடைத்தால் தன் ஜன்மம் சாபல்யமாய் விட்டதென்று சந்தோஷத்துடன் ஸ்ரீனிவாசனின் அனுமதி பெற்று எப்போதும்போல் வராஹமூர்த்திக்கு பணிவிடைசெய்ய போனாள். வராஹமூர்த்தி வகுளாதேவியைப் பார்த்து அம்மா! இன்று நீ மிகவும் சந்தோஷமடைந்தவள்போல் காணப்படுகிறாய் காரணமென்னவென்று கேட்டார். வகுளாதேவி ஸ்ரீனிவாசனுக்கும் தனக்கும் நடந்த விருத்தாந்தத்தை தெரிவித்தாள் அப்போது வராஹசுவாமி ஸ்ரீனிவாசனும் நானும் ஒரே அம்சமுடையவர்கள், நீ இன்று முதல் ஸ்ரீனிவாசனுக்கு வேண்டிய சேவைசெய்து கலியுக அந்தியத்தில் அவருடைய பாதார விந்தம் சேருவாயென்று சொல்லி, வகுளாதேவியை ஸ்ரீனிவாசனிடம் போகும்படி சொன்னார். அப்போது வகுளாதேவி வராஹசுவாமியின் அனுமதிபெற்று ஸ்ரீனிவாசனுக்கு சேவைகள் செய்துக்கொண்டு ஆனந்தமுற்றவளாய் இருந்தனள்.



# ஸ்ரீ பத்மாவதி ஜனனம்

சேஷாசலத்திற்கு தென் கிழக்கு பாகத்தில் சுமார் ஒரு யோஜனை தூரத்தில் சுதர்மன் என்ற சந்திரவம்ச அரசன் தொண்ட ராஜ்யத்தை பரிபாலித்து வந்தார். அவருக்கு ஆகாசராஜன், தொண்டமானன் ராஜனென்று இரு புத்திரர்களிருந்தனர். அவர்களில் மூத்தவரான ஆகாசராஜனுக்கு ராஜ்ய பட்டாபிஷேகம் செய்து, சுதர்மன் தவம் செய்ய, காட்டிற்குச் சென்றார். ஆகாசராஜன் ராஜ்ய பரிபாலனம் செய்யும்போது, பிரஜைகள் ராஜ்யபக்தி ஸத்தியம் பரோபகார முள்ளவர்களாய் ராஜாக்ஞையை மீறாமல் நடந்துவந்தனர். ராஜாவும் அவர்களுக்கு யாதொரு குறையுமில்லாமல் தன் குழந்தைகளை போல் காத்து வந்தார். ஆனால் தனக்கு புத்திர சந்ததியில்லாததால் மனக்குறை யுடையவராயிருந்தார். இப்படியாக சில காலம் சிந்தையுற்று, ஒரு நாள் தன் குருவான சுகமுனீந்திரரை அழைப்பித்து தனக்குள்ள குறையை தெரிவித்தார். அவ்வார்த்தைகளைக் கேட்ட சுகமுனிவர் ராஜனைப் பார்த்து நீ புத்திரகாமேஷ்டியாகம் செய்தால் தவறாமல் சந்ததி, உண்டாகுமென்று சொன்னார். அவ்வார்த்தைகளைக் கேட்டு ஒரு சுபதினத்தில் யாககுண்ட மேற்படுத்த, தங்கத்தினால் செய்யப்பட்ட கலப்பையால் பூமியை உழ ஆரம்பித்தார் அப்போது பூமிக்குள்ளிருந்து ஒரு பெட்டி கிடைத்தது, அப்பெட்டியை திறந்துபார்க்க அதில் ஸஹஸ்ரதள கமலத்தின் மத்தியில் தேஜோமயமான ஒரு புத்திரிகா ரத்தினத்தைக் கண்டு, ராஜன் அப் பெண்ணை எடுத்துக் கொள்ளச் சென்றார்; அப்போது ஆகாயவாணி ஓ ராஜா! உன் பூர்வ ஜன்ம பலத்தால் உனக்கு இப்புத்ரிகை கிடைத்தாள், இக்குழந்தையை உன்னுடைய குழந்தையைப்போல்நினைத்து வளர்த்து வரவும்; இவளால் நீ அநேகஜன்மங்களில் செய்த பூஜாபலன்களை அனுபவித்து, நீயும் உன் வம்ஸத்தவர்களும், இவளால் மோக்ஷமடைவீர்களென்று கூறிற்று. ஆகாசராஜன் அந்த ஆகாயவாணி சொன்னதைக் கேட்டு மிகவும் ஆனந்தமுற்றவனாய் அந்த தங்ககமலங்களின் மத்தியி

லுள்ள குழந்தையை யெடுத்து, இவள் சாக்ஷாத் லக்ஷ்மியே; நம் பூர்வஜென்ம புண்யத்தால் நமக்கு கிடைத்தனள் என்றார். அப்போது தரணீதேவி அக்குழந்தையை எடுத்துக் கொண்டு அந்தப்புரம்போய் சேர்ந்தாள் ஆகாசராஜன் தன் சபையிலுள்ள பிராமணர்களை வரவழைத்து, அக்குழந்தைக்கு நாமகரணம் செய்விக்கும்படி கூறினர். பிராமணர்கள் அக்குழந்தைக்கு பத்மாவதியென்று நாமகரணம் செய்து அநேகவிதங்களில் ஆசீர்வதித்தார்கள். ஆகாசராஜன் அப் பிராமணர்களுக்கு வெகுமதிகளுடன் தாம்பூலங்களை சமர்பித்து அவர்களை திருப்திசெய்வித்து அவரவர்கள் வாசஸ்தலங்களுக்கு அனுப்பினர். தரணீதேவி அக் குழந்தையை மிகவும் அன்புடன் வளர்த்து வந்தாள். அக் குழந்தை நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமாய் வளர்ந்து சிலகாலத்திற்குள் தகுந்த வயதடைந்து, தன் தோழிகளுடன் நந்தவனத்தில் சந்தோஷமாய் இருக்கும் போது நாரதமுனிவர் வுருத்தாப்பியமான வேஷம் தரித்து பத்மாவதியை சந்தித்தார். அப்போது பத்மாவதி அந்த கிழவரைப் பார்த்து பயந்து தன் தோழியர்களுடன் அரண்மனைக்குப்போக பிரயத்தனித்தாள். அதற்குள் நாரதர் பத்மாவதியை பார்த்து, அம்மா! பயப்படாதே! நான் வேறு யாருமில்லை உங்களுடைய குலகுரு; உன்னுடைய கையைப் பார்த்து புலனைச் சொல்ல வந்திருக்கிறேனென்றார். அப்போது மாறுவேடம் பூண்டு வந்திருக்கின்ற நாரதரைப் பார்த்து நமஸ்கரித்து வெட்கத்தால் ஒன்றும் பேசாமல் நின்றிருந்தனள் நாரதர் புன்னகையுடன் அம்மா பயப்பட வேண்டாம், உன்னுடைய கையைக் காட்டென்று சொல்லி உட்க்கார்ந்தார். அப்போது பத்மாவதி நாரதரின் சமீபம் சென்று தன் வலது கையை நீட்டி நாரதருக்கு காண்பித்தாள் நாரதர் தன் இடது கையால் பத்மாவதியின் கையை பிடித்துக்கொண்டு உன் கையில் அநேக சுப லக்ஷணங்களுடன் கூடிய ரேக்ககளுள்ளன; இந்த ரேகைகள் சாமான்ய மானவர்களுக்கு யிருப்பது துர்லபம், இந்த ரேகைகளால் உனக்கு சொல்ல வேண்டிய விஷயம் சிலவற்றை சொல்லுகிறேன். உன்கையில் மத்ஸம்போலவும்,

கூர்மம் போலவும், சத்ரசாமரம் போலவும் ரேகைகளிருப்ப தால் உன்னை விஷ்ணுவே விவாகம் செய்துகொள்வா ரென்று சொல்ல வேண்டும் உன் சர்வாங்க லக்ஷணங்களைப் பார்த்து பகவான் உன்னை பிரேமிப்பார் என்று சொல்ல. பத்மாவதி முனிவரின் வார்த்தைகளைக் கேட்டு வெட்கத் துடன் கண்களை மூடியவாரே மனதில் விஷ்ணுவை நினைத்து தியானித்து, மாறுவேடத்திலுள்ள நாரதருக்கு நமஸ்கரித்து கண்களைத் திறந்து பார்த்தாள். அப்போது மாறுவேடத்தி லுள்ள நாரதர் தன் நிஜஸ்வரூபத்துடன் பத்மாவதிக்கு தரிசனம் தந்தார்,நாரதரின் நிஜஸ்வரூபம் பார்த்து பத்மாவதி மிக்க ஆனந்தமுடையவளாய் அவருக்கு பிரதக்ஷிணை நமஸ் காரம் செய்தாள் நாரதர் பத்மாவதியை அநேக விதங்களில் ஆசீர்வாதம் செய்து புறபட்டுச் சென்றுர். பத்மாவதி எப்போதுப்போல் தன் தோழிமார்க்களுடன் வனங்களைச் சுற்றி- பகவானை சதா தியானித்து வந்தார்.

# ஸ்ரீனிவாசன் வேட்டையாடச்சென்று பத்மாவதியைப் பார்த்து மோகித்தல் பத்மாவதி கற்களால் அடித்தல்

சேஷாசலத்தில் ஸ்ரீனிவாசனுக்கு வகுளாதேவி ஸர்வோபசாரங்களும் செய்துவர, புற்றில் சுகமாய் காலம் கழித்து வந்தார். இப்படியிருக்க ஒருநாள் ஸ்ரீனிவாஸர் வகுளாதேவியைப் பார்த்து, அம்மா! எனக்கு வேட்டையாட வேண்டுமென்று ஆவலாக யிருக்கிறது நான் சென்று மிருகங்களை வேட்டையாடி இந்த க்ஷேத்திரத்திலுள்ள பக்தர்களைப் பார்த்து அவர்களுக்கு துஷ்ட மிருகங்களால் ஏதாவது துன்ப மிருந்தால் அதை நிவர்த்திசெய்து வருகிறேனென்று சொன்னுர் அப்போது வகுளாதேவி ஸ்ரீநிவாசனை பார்த்து நீ வேட்டையாடச் சென்று வெகு சீக்கிரத்தில் திரும்பி வரவேண்டுமென்று சொல்லி, அறுசுவையோடு போஜனமளித்து, பிரயாணத்

திற்கு வேண்டிய வஸ்திரா பரணங்களை ஸ்ரீனிவாசனுக்கு கொடுத்தாள் அப்போது ஸ்ரீனிவாசன் வேடனாய் வில்லுட னிருப்பதை வகுளாதேவி பார்த்து, ராமாவதாரத்தில் விஸ்வாமித்திரருடன் யாக சம்ரக்ஷணைக்காக போகிறானா! அல்லது கிருஷ்ணாவதாரத்தில் துஷ்டனான கம்ஸனை வதைக்க போகிறானா! என்று நினைத்து ஆச்சரியமாய் பகவானைப் பார்த்தனள் இதற்குள் ஸ்ரீனிவாசன் ஸகல ஆபரணங்களையும் தரித்து வெண்புரவி மேலேறி, வகுளாதேவியைப் பார்த்து வேட்டையாடப்போக அனுமதி கேட்பவர்போல் நடித்தார். வகுளாதேவி ஸ்ரீனிவாசனின் விருப்பத்தைத் தெரிந்து குமாரா! நீ வேகமாய்ச் சென்று க்ஷேமமாய்த் திரும்பிவா என்று பகவானை வேண்டிக் கொண்டாள் ஸ்ரீனிவாசன் அப்படியே யென்று வகுளாதேவி பார்த்துக் கொண்டிருக்க, அரண்யமார்க்கமாக புறப்பட்டுச் சென்றார்.

ஸ்ரீனிவாசன் சிறிது தூரம் சென்று அநேக குரூர மிருகங்களைக் கொன்று, புண்ய தீர்த்தங்களில் வசித்துவந்த பக்தர்களின் க்ஷேமங்களை தெரிந்து கொண்டு புறப்பட்டுச் செல்லும்போது ஒரு மதயானையைக் கண்டார். அந்த மதயானையைப் பார்த்து அதை அந்த காட்டில் வெகுதூரம் துரத்திச் செல்ல, அது சடசியில் நாராயணபுரமென்கிற அகஸ்தியாஸ்ரமத்தினருகில் ஆகசராஜனுடைய நந்தவனத்தில் பிரவேசித்து தன் தும்பிக்கையை மேலெடுத்து பகவானைப்பார்த்து நமஸ்கரித்து கம்பீரமாக கர்ஜனை செய்து புறப்பட்டுச் சென்றது அப்போது பத்மாவதி தன் தோழிமார்க்களுடன் நந்தவனத்தில் புஷ்பங்கள் பறிக்க வந்து, இந்த யானையின் கர்ஜனையைக் கேட்டு மிகவும் பயந்தவர்களாய் தோழிகளெல்லோரும் பத்மாவதியைப் பார்த்து நாம் இனி அந்தப்புரம்போய் சேருவோமென்று பத்மாவதியினருகில் வந்தனர். இதற்குள் ஸ்ரீனிவாசன் யானையைவிட்டு நந்தவனத்தில் செல்லும்போது அவ்விடமிருந்த பத்மாவதியையும் தோழிமார்க்களையும் பார்த்து அருகில்செல்லலானார். அதற்குள் பத்மாவதி வேடனாயிருக்கும் பகவானைப் பார்த்து தன் தோழிகளுடன் இந்த வேடன் யாரோ வெட்டையாடிக்கொண்டு இவ்விடம்

வந்துக் கொண்டிருக்கிறான், நீங்கள் சென்று அவன் விருத்தாந்தத்தை தெரிந்துக் கொண்டு இவ்வனத்தில் வேட்டையாடக் கூடாதென்று சொல்லிவரும்படி தோழிகளை யனுப்பினாள். அப்போது அவர்கள் ஸ்ரீனிவாசனிடம்சென்று நீயார்? நீஇந்த வனத்திலுள்ள மிருகங்களை வேட்டையாடக் கூடாது நீ இவ்விடத்திற்கு என்ன காரியமாய் வந்திரென்று தெரிந்து வர எங்கள் தேவி அனுப்பியிருக்கின்றனள், உன் பெயர் என்ன? நீ எவ்விடத்திலிருந்து வருகிறாயென்று தோழிகள் கேட்க, பகவான் என் விருத்தாந்தத்தை உம்முடைய தேவிக்கு தெரிவிக்கிறேனென்று சொல்லி பத்மாவதியின் சமீபம் சென்று, நானொரு மதயானையை துரத்திக்கொண்டு வந்தேன், அது எங்குசென்றதென்று பத்தமாவதியைக் கேட்டார். அப்போது பத்மாவதி இவன் யாரோ பயித்தியக்காரன் என்று நினைத்து சிரித்தாள்; தோழியர்களும் சிரித்தனர், ஸ்ரீனிவாசனும் சிரித்தார், பத்மாவதி பகவானைப் பார்த்து நீ யார்? எவ்விடத்திலிருந்து அந்த மத யானையை துரத்தி வருகிறாய்? உன் ஊர் யாது உன் பெயர் என்ன? உன் தாய் தந்தைகள்யார்? என்று வினவினாள். அதற்கு ஸ்ரீனிவாசன் நான் சேஷாசலத்தில் வசிப்பவன் என்னுடையது க்ஷத்ரியகுலம், என் தந்தையின்பெயர் வசுதேவன் தாயின்பெயர் தேவகீதேவி, என் அண்ணன் பலராமன் என் தங்கை சுபத்திரை, பார்த்திபன் என் சிநேகிதன் பஞ்சபாண்டவர்கள் என் பந்துக்கள், நான் கிருஷ்ண பக்ஷ அஷ்டமியில் பிறந்ததினால் எனக்கு கிருஷ்ணன் என்று பெயரிட்டனர். இது என் விருத்தாந்தம் இனி உன் குல, கோத்திரங்களையும், உன் தாய் தந்தைகளின் பெயர்களையும் நான் தெரிந்துகொள்ள வேண்டுமென்று பயித்தியகாரன்போல் பேசினார். பத்மாவதி வேடனுருவத்திலுள்ள பகவானைப் பார்த்து நான் ஆகாசராஜன் மகள்; என் பெயர் பத்மாவதி; என் தாய் தரணீதேவி; நாங்கள் சந்திரவம்சத்தவர்கள்; எங்களுடையது அத்ரி கோத்திரம் என்றாள் இவ்வார்த்தைகளைக் கேட்டவுடன் ஸ்ரீனிவாசன் பத்மாவதியை எப்படியாவது விவாஹம் செய்துக்கொள்ள ஆவலுள்ளவ

ராய் யோசித்து பத்மாவதியைப்பார்த்து ,அப்படியானல்நான் உன்னை விவாஹம் செய்துகொள்ள நினைத்திருக்கிறேன், நீ என்னை விவாஹம் செய்துகொள்வாயா யென்று கேட்டார். அதை கேட்டவுடன் பத்மாவதி மிகவும் கோபமுடையவளாய், ஓ மூர்க்கனே! எனனையா நீ விவாஹம் செய்துச்கொள்ளப் போகிருய்? நீ சீக்கிரம் இவ்வனத்தைவிட்டு வெளியேசெல் என்றனள் அப்போது ஸ்ரீனிவாசன் பத்மாவதியை சமீபித்து உன்னை வேண்டிக் கொண்டாவது மணந்துக்கொள்ள வேண்டுமென்று நினைத்து உன்னுடன் பேசிக்கொண்டிருக்கிறேனென்ருர். அப்போது பத்மாவதி எங்கள் உத்திரவில்லாமல் இவ்வனத்தில் பிரவேசித்தால் என் தோழிகளிடம் சொல்லி உன்னை தண்டிக்க நினைத்தேன், உன் வார்த்தைகளைக் கேட்டு உன்னை பயித்தியக்காரனென்று நினைத்து இதுவரையிலும் பேசியதால் உனக்கு துற்புத்தி அதிகமாயிற்று. இனி நீ இவ்விட மிருந்தால் உன் பிராண மிருக்காது, புறபட்டுசெல் என்று சொன்னுள். உடனே ஸ்ரீனிவாசன் பத்மாவதியைப்பார்த்து, என் பிராணன்போக அது என்னிடமில்லை; நான் உன் பிராணுதாரன், என்னை நீ விவாஹம் செய்துகொள்ள வேண்டுமென்ருர். பத்மாவதி யெத்தனை நேரம் சொல்லியும் கேளாமல் பின் தொடர்ந்தார். அப்போது பத்மாவதி தன் தோழிமார்களிடம் சொல்லி,ஸ்ரீனிவாசன்மேல் கற்களை எறிந்தனள். ஸ்ரீனிவாசன் அக்கல்லடியினின்று தப்பித்துக் கொண்டு அவ்வனத்தைவிட்டு புறப்பட்டுபோகநினைத்து தன்னுடைய நிஜரூபத்தை பத்மாவதி கண்ணுக்கு காட்டிவிட்டு சேஷாசலம் வந்து சேர்ந்து மௌனமாய் புற்றில் சயனித்திருந்தார்.

ஸ்ரீனிவாசன்மேல் கற்களைவீசிய பிறகு பத்மாவதியும் தோழிமார்களும் மிக வேகமாய் அந்தப்புரம்போக புறப்பட்டனர். ஆனல் ஸ்ரீனிவாசன்மேல் கற்களைவீசியதுமுதல் அவளுடைய மனேபாவம் மாறிவிட்டது அதனல் அவள் நடக்கமுடியாதவளாய், ஒன்றும் பேசமுடியாமல் ஸ்ரீனிவாசனுடையரூபம் அவள் மனத்தில பிரதிபிம்பித்துக் கொண்டு ஸ்திரமாயிற்று. பத்மாவதி ஒன்றும்பேசாமல் மௌனமா

யிருந்தாள். தோழியர்கள் அவளைப் பார்த்து பயந்தவர்களாய் ரதத்தின்மீது ஏற்றிக்கொண்டு சென்று தரணீதேவியிடம் சேர்ந்து, வனத்தில் நடந்த விஷயத்தை தெரிவித்தனர். தரணிதேவியால் இவ்விஷயத்தை ஆகாசராஜன் தெரிந்துக்கொண்டு, தன் குருவான சுகமுனிவரை அழைப்பித்து நடந்த விருத்தாந்தத்தை தெரியப்படுத்தினுர். சுகமுனிவர் ராஜனைப்பார்த்து நந்தவனத்தில் பயமுற்றதினுல் இம்மனே சஞ்சலம் உண்டாயிற்று, இதை நிவர்த்திசெய்ய சாந்தி செய்யவேண்டும், சாந்திசேய்யும் விதம் தெரியப்படுத்துகிறேன் அதுபோல் சாந்தி செய்வித்தால் குணமாகுமென்று சொல்லி, அகஸ்தி யாஸ்ரமத்திலுள்ள சிவனுக்கு பதினேரு பிராம்மணர்களால் அபிஷேகம் செய்வித்து, தூப தீப நைவேத்யங்களுடன் பூஜித்து, அந்த அபிஷேக தீர்த்தத்தை பத்மாவதியின்மீது தெளித்தால் இப்பீடை பரிகாரமாகுமென்று சொன்னுர். அப்போது ராஜன் பிராம்மணர்களை அழைப்பித்து, பூஜாவிதானத்தை அவர்களுக்குகூறி, பூஜைக்குவேண்டிய சாமக்ரியங்களை தன் சேவகர்களுடன் அகஸ்தியாஸ்ரமம் அனுப்பி, அவ்விடமுள்ள சிவனுக்கு அபிஷேகம்செய்ய ஆரம்பித்தார். இவ்விடமிப்படி நடந்துக்கொண்டிருந்தது.

# பத்மாவதி விருத்தாந்தம் வகுளாதேவிக்கு ஸ்ரீனிவாசன் தெரிவித்தல்

சேஷாத்ரியில் புற்றில் மௌனமாய் இருக்கும் ஸ்ரீனிவாசனுக்கு வகுளாதேவி அறுசுவைவுடன் போஜனம் தயாரித்து ஸ்ரீனிவாசனின் சமீபம்சென்று, குமாரா! எழுந்து ஸ்நானம்செய், போஜனம்செய்ய நேரமாயிற்றென்று, எழுந்திருக்கச் சொன்னுள். ஆனுல் பகவான் ஒன்றும் பதிலளிக்காமல் மௌனமாய் யிருந்தார். அப்போது வகுளாதேவி ஸ்ரீனிவாசா! நீ பகலில் நித்திரைசெய்வதில்யே யென்று ஸ்ரீனிவாசனைப் பார்த்தனள், பகவான் கண் திறந்து மறு

வார்த்தை பேசாமலிருப்பதைக் கண்டு, ஏன் இப்படி மௌனமாயிருக்கின்றனை? வேட்டையாடச் சென்றபோது யாருக்காவது அபசாரம்செய்தனையோ? அல்லது பக்தர்களுக்கு குரூர மிருகங்களினால் துன்பமுண்டாயிற்றா? என்று வினவியும் பகவான் பதில் கூறவில்லை அப்போது வகுளாதேவி நீ யாரையாவது பார்த்து மோகித்தாயா? அல்லது உன்னை யாராவதுபார்த்து மோகித்தனரா? என்று கேட்க அப்போது அவ்வார்த்தைகளுககு சம்மதித்தார்போல் தலையை அசைத்தார் அப்படியானால் எழுந்து ஸ்நானம் செல்து பசியாருவாயாக! நீ மோகித்த அந்த பாக்கியவதி யாரோ தெரிந்துகொண்டு உனக்கு விவாஹம் செய்து வைக்கிறே னென்றனள். அப்போது பகவான் சந்தோஷித்து ஸ்நானம்செய்து, போஜனம் செய்தார் பிறகு வகுளாதேவி ஸ்ரீனிவாசனைப் பார்த்து, நீ மோகித்த கன்னிகை எவ்விடமிருக்கிறுள்? அவள் குலகோத்திரம் பெயர்யாது? நீ எபபடி அவளை சந்தித்தாய்? அவ்விஷயத்தை விவரமாய் தெரிவிக்கும்படி கேட்டனள் ஸ்ரீனிவாசன் அவளுடைய கேள்வியைக்கேட்டு நகைப்புற்று. அம்மா! இவ்விடத்திற்கு ஒரு யோஜனை தூரத்தில் நாராயணபுரமென்கிற பட்டணமுள்ளது. அப்பட்டணத்தை ஆகாசராஜன் என்ற சந்திர வம்ஸ ராஜன் பரிபாலித்து வருகிறுர். அவருக்கு பத்மாவதி என்ற ஒரு குமார்த்தி இருக்கிறுள்; அவள் நந்தவனத்தில் புஷ்பங்கள் பறித்துக் கொண்டிருக்கையில், நானொரு மதயானையை துரத்திக் கொண்டு அந்த நந்தவனத்தினுள் சென்றேன் அந்த யானை பின்னால் திரும்பி தன் தும்பிக்கையை மேலெடுத்து கர்ஜித்து நமஸ்கரித்து சென்றது. நான் அவ்வனத்தினுள் செல்லும் போது, பத்மாவதியைப் பார்த்து என் விருபத்தை அவ்விடம் சொல்லி, என்னை விவாஹம்செய்து கொள்ளும்படி கோரினேன். அவள் அதற்கு சம்மதிக்காமல் தன் தோழியர்களிடம் சொல்லி என்மேல் கற்களை வீசினுள், அவள் மேலுள்ள பிரேமையினுல், அவர்களை ஒன்றும்செய்ய விரும்பாதவனாய் மெள்ள கல்லடியுனின்றும் தப்பித்துக் கொண்டு சேஷாத்ரி வந்து சேர்ந்தேன்; குதிரை மாத்திரம்

கற்களாலடிபட்டு அவ்விடமே மூர்ச்சித்து விழுந்தது என்று சொல்லி, அந்த பத்மாவதியை எப்படியாகிலும் எனக்கு விவாஹம் செய்விக்கவேண்டுமென்று கேட்டார் அப்போது வகுளாதேவி நீ அவளை பிரேமிக்க காரணம் என்ன? வென்று கேட்டனள். அப்போது ஸ்ரீனிவாசன் வகுளாதேவி யைப்பார்த்து, அம்மா! ராமாவதாரத்தில் ராவண கும்ப கர்ணர்களைக் கொன்று லங்கையை விபீஷணனுக்கு பட்டாபிஷேகம் செய்து, சிலகாலம் சீதை இலங்கையிலிருந் ததினால் சீதை அக்கினி பிரவேசம் செய்தபோது, அக்கினி தேவன் இரண்டு சீதைகளை எனக்கு சமர்ப்பித்தான். நான் அக்னிதேவனைப் பார்த்து இவள் யாரென்று கேட்டேன் அதற்கு அக்னிதேவன் இவள் வேதவதியென்ற பதிவிரதை; இவள் தன் தந்தையின் கோரிக்கையை நிறைவேற்ற இமய மலைச்சாரலில் தவம் செய்துகொண்டு, விஷ்ணுதேவனை விவாஹம் செய்துக்கொள்ள கோரினாள், அச்சமயம் இரா வணன் இவளிடம் வந்து தன்னை விவாஹம் செய்துக் கொள்ளும்படி கட்டாயப் படுத்தினான் இவள் அப்போது தன் மனதிலுள்ளதை இராவணனுக்கு தெரிவித்தாள் ஆனால் இராவணன் கேளாமல் பலத்காரமாய் விவாஹம் செய்து கொள்ளும்படி கோரினான். அவள் அதற்கு சம்ம திக்காததால் அவன் அவளை பலாத்கரிக்கும்போது ஒன்றும் செய்யத் தோன்றாதவளாய் தன் தபோ மஹிமையால் அக்கினி குண்டத்தை உண்டாக்கி, ராவணனைப் பார்த்து என்னைப்போல் ஸ்திரீயினால் உன் வம்ஸம் நிர்மூலமாகு மென்று சாபம்கொடுத்து அந்த அக்னியில் பிரவேசித்தாள் நான் அப்போது அவளை என் மனைவியான சுவாஹாதேவி யினிடம் சேர்த்தேன் இராவணன் சீதையை யெடுத்துச் செல்லும்போது நான் ராவணனைப் பார்த்து, ராவணா! நிஜமான சீதை என்னிடம் இருக்கிறாள், நீ எடுத்துச் செல்வது மாயாசீதை, ஸ்ரீராமன் நிஜசீதையை என்னிடம வைத்திருக்கிறார், உனக்கு நிஜ சீதையை சமர்ப்பிப்பேன் அந்த மாயா சீதையை விட்விடு யென்று சொல்லி இந்த வேதவதியை ராவணனிடம் கொடுத்து நிஜமான சீதையை

என்னிடம் மறைத்துவைத்திருந்தேனென்று சொன்னார். இதற்குள் சீதை எனக்கு நாமஸ்கரித்து எனக்காக இலங்கையில் அநேககஷ்டங்களை யனுபவித்த இந்த வேதவதியை அனுக்கிரஹிக்க வேண்டுமென்று கோரினாள் நான் அதற்கு சம்மதித்து, நான் இந்த அவதாரத்தில் ஏகபத்னி விரதனானதால் கலியுகத்தில் வேதவதியை விவாஹம் செய்துகொள்வதாய் சீதைக்கு வரம் கொடுத்தேன், ஆனதால் இவளை விவாஹம் செய்துக்கொள்ள வேண்டுமென்றார். அப்போது வகுளாதேவி மிகவும் ஆச்சரியமடைந்தவளாய், அப்படியானால் நான் தரணீதேவியிடம் சென்று இக்காரியத்தை நிறைவேற்றி வைப்பதாய் கூறி, ஸ்ரீனிவாசனின் அனுமதி பெற்று, நாராயண புரத்திற்கு சென்றுக்கொண்டிருக்கும் போது வழியில் அகஸ்தியாஸ்ரமத்திலுள்ள சிவபெருமானுக்கு மஹா வைபவத்துடன் பூஜைகள் நடந்திக்கொண்டிருந்தது. வகுளாதேவி அவ்விடமுள்ள ஜனங்களைப் பார்த்து இவ்விடம் என்ன விசேஷமென்று கேட்டனள். அதற்கு அவர்கள் நாராயணபுரத்தை பரிபாலித்துவரும் ஆகாசராஜன் மகள் பத்மாவதி நந்தவனத்தி லிருக்கும் போது வேடனொருவன் வேட்டையாடிக்கொண்டு அவ்வனத்தினுள் பிரவேசித்து, அவ்விடமிருந்த பத்மாவதியைப் பார்த்து பைத்தியக்காரன்போல் நடித்து, தன்னை விவாஹம் செய்துக் கொள்ளும்படி பத்மாவதியைக் கோரினன். அவள் கோபத்துடன் அவனை கற்களால் அடிக்க வைத்தனள் அதுமுதல் புத்தி சுவாதீனமில்லாமல் இருப்பதால் சிவனுக்கு அபிஷேகம் செய்வித்து, அந்த தீர்த்தத்தை பத்மாவதியின்மேல் தெளிப்பதற்கு, சிவனுக்கு பூஜைகள் செய்து வருவதாய் கூறி, அம்மா! நீங்கள்யார்? எவ்விடத்திற்கு சென்றுக்கொண்டிருக்கிறீரென்று வகுளாதேவியைக் கேட்டனர் அப்போது வகுளாதேவி தரணீதேவியின் தரிசனார்த்தம் போவதாய் சொன்னாள். அவ்வார்த்தைகளைக் கேட்டு, அம்மா! சிறிதுநேரம் இவ்விடமே இளைப்பாருங்கள் நாங்கள் தரணீதேவியிடம் அழைத்துச் செல்கிறோமென்றனர். வகுளாதேவி அவர்கள் சொல்லைக் கேட்டு அவ்விடமே இளைப்பாறினாள்.

# வகுளாதேவி நாராயணபுரத்தில் ஆகாசராஜனை சந்தித்தல்

வகுளாதேவி சேஷாசலத்திலிருந்து புறப்பட்டு ஆகாச ராஜன் பட்டணத்திற்குப் போய்ச் சேர்ந்த பிறகு ஸ்ரீனி வாசன் இப்படியாக யோசிக்கலானார். வகுளாதேவி சென்ற காரியம் ஜெயமாகுமோ; ஆகாதோ யென்ற, சேஷாசலத்தி னின்று புறப்பட்டு நாயணபுரம் சேர்ந்து, குறத்தி வேஷம் தரித்து அந்நகரில் வீதிகள் தோறும் சுற்றிவந்தாள், இவ் விஷயத்தை தாதிகளால் தரணீதேவி தெரிந்துக் கொண்டு அந்த குறத்தியை தன் அரண்மனைக்கு அழைப்பித்து, ஓர் ஆஸனத்தில் அமர்த்தி, அம்மா! குறவஞ்சி எனக்கு ஒரு கோரிக்கை உள்ளது, அதை எனக்கு விவரமாய் சொல்ல வேண்டும் உனக்கு வேண்டிய வெகுமதி தருகிறேனென்று தெரிவித்தாள். அப்போது அக்குறவஞ்சி தரணீதேவியைப் பார்த்து அம்மா! கோரிய வற்றை யெல்லாம் எங்கள் தேவ தையினால் உனக்கு தெரிவிக்கிறேன். நீ ஒன்றும் சந்தேக படாதே! எனக்கு என் குழந்தைக்கும் உணவளிக்கவும் நாங்கள் திருப்தியாய் சாப்பிட்டு, உன் விருப்பத்தை தெரி விக்கிறேனென்றாள். தரணீதேவி சந்தோஷித்து அவர்களுக்கு திருப்தியாய்உணவளித்தாள். அவர்கள் போஜனம் செய்து தரணீதேவியைப் பார்த்து நாங்கள் திருப்தியாய் போஜனம் செய்தோம், எங்களுக்கு தாம்பூலம் அளித்து நீபோய் மங்கள ஸ்நானம் செய்துவரும்படி தரணீதேவியை ஸ்நானத்திற்கு அனுப்பி, குறவஞ்சி தன்னிடமுள்ள தேவதா சாமான்களையும் மந்திரக் கோலையும் சித்தப்படுத்தினாள் இதற்குள் தரணீதேவி மங்கள ஸ்நானம் செய்து அடையணிந்து, குறவஞ்சியிடம் வந்தனள் அப்போது குறவஞ்சிவேஷத்திலுள்ள ஸ்ரீனிவாசன் தரணீதேவியைப் பார்தது உங்கள் குலதெய்வம் யாரென்று கேட்டார். அப்போது தரணீதேவி குலதெய்வம் சேஷாத்ரி வாசன் என்று சொனால்; இதர்குள் குறவஞ்சி அம்மா! உன் சொல் மெய்தான்; இதோ சேஷாத்ரிவான் உன்

னெதிரிலுள்ளான்; இனி உன் கோரிக்கையை தெரிவிக்கி றேனென்று சொல்லி, அம்மா! உன் புதல்வி நந்தவனத்தில் சுற்றிவரும்போது சேஷாத்ரிவாசனுன ஸ்ரீனிவாசன் வேட்டையாடிக் கொண்டு அந்த நந்தவனத்தில் பிரவே சித்தார். அப்போது தோழிமார்க்களுடன் புஷ்பங்கள் பரித்துவந்த பத்மாவதியைக்கண்டு மோகித்து, தன்னை விவாஹம் செய்துகொள்ளும்படி கேட்டார். பத்மாவதி அவனை யாரோ வேடனென்று நினைத்து தன் தோழிகளிடம் சொல்லி கற்களால் அடித்தனள். ஸ்ரீனிவாசன் அந்த கல்லடியினின்று தப்பித்தக் கொண்டு நந்தவனத்லிருந்து போகும்போது தன் நிஜஸ்வரூபத்தை பத்மாவதிக்கு காட்டி புறப்பட்டுச் சென்றுர். அதுமுதல் உன் மகள் ஸ்ரீனிவாசன் மேல் மோஹம்கொண்டு, தன்னை மறந்திருக்கிருள் இவளை ஸ்ரீனிவாசனுக்கு கொடுத்து விவாஹம் செய்தால் இம்மனோ வியாதி தீரும், இல்லாவிடில் சில நாட்களில் மரண மடைவாள் என்றனள். இவ்வார்த்தைகளைக் கேட்டதும் தரணிதேவி பத்மாவதியால் நடந்த விருத்தாந்தத்தை தெரிந்துக்கொண்டு குறத்தியைப் பார்த்து ஸ்ரீனிவாசனுக்கு எப்படி விவாஹம் செய்து கொடுப்பேனென்றனள் அப் போது குறத்தி தரணீதவியைப்பார்த்து சிறிது நேரத்திற் குள் சேஷாத்ரியிலிருந்து ஒரு கிழவி கன்னிகையைக் கோரி இவ்விடத்திற்கு வருவாள், அவளால் உங்களுக்கு ஸகல மான காரியங்களும் கைகூடுமென்று சொல்லி வெகுமதி களைப் பெற்றுக்கொண்டு, குறத்தி வேஷத்திலிருந்து நிஜஸ் வரூபம் பெற்று சேஷாத்ரி போய்ச் சேர்ந்தார். இதற்குள் அகஸ்தியாஸ்ரமத்திலிருந்து சிவனுக்கு பூஜைசெய்து, அபி ஷேக தீர்த்தத்தை கொண்டுவந்து பத்மாவதியின்மேல் தெளித்தனர். தாதிகள் வகுளாதேவியை அழைத்துக் கொண்டு தரணீதேவியிடம் வந்து. இவள் உங்கள் தரிச னார்த்தம் வந்திருப்பதாய் கூறினர்.

தரணீதேவி அவளைப் பார்த்து சேமசமாசாரங்களை விசாரித்து ஒரு ஆஸனத்தில் அமர்த்தி, நீங்கள் எவ்விட மிருந்து வருகிறீர்கள்? உங்கள் வரவிற்கு காரணம்யாது?

என்று கேட்டனள். அதற்கு வகுளாதேவி தரணீதேவியைப் பார்த்துஉன்புத்ரிகையின் விவாஹகாரியமா வந்திருப்பதாய் கூறினல். வகுளாதேவியின் வர்த்தைகளைக் கேட்டு, அம்மா! நாங்கள் வேறே பிரயத்தனமாயிருக் கின்ருேம், ஆனலும் உங்களுடைய நிவாசம், குலகோத்திர, நாமதேயங்களை தெரிவிக்கும்படி கேட்டனள், அதற்கு வகுளாதேவி எங்களிருப்பிடம் சேஷாசலம்; சந்திரவம்சம்; வசிஷ்டகோத்திரம்: ஸ்ரவண நக்ஷத்திரம்; இனி பந்துக்கள் தந்தை வசுதேவர். தாய் தேவகிதேவி, அண்ணன் பலராமன், பஞ்சபான்டவர்கள் பந்துக்கள், பார்த்தன்; சிநேகிதன், பெயர் கிருஷ்ணன்; பலசாலி; தனவான்; வித்யாவந்தன்; ஆச்சாரமுள்ள உத்தமன்; வயது இருபத்தைந்து என்றனள். இவ்வார்த்தைகளைக் கேட்டதும் தரணீதேவி வகுளாதேவியைப் பார்த்து, உன் சொற்படி யௌவனமுள்ளவன், தனவான், பலவான், நற்குணமுள்வன் சரி; இதுவரை அவனுக்கு விவாஹம் ஆகாததற்கு காரணமென்னவென்று கேட்டனள் அப்போது வகுளாதேவி, அம்மா! அவனுக்கு சிறுவயதிலேயே விவாஹமாயிற்று, குழந்தைகளில்லாததினல் மறு விவாஹம்செய்து கொள்ள விருப்பம், அவ்வளவே யொழிய அவனிடத்தில் வேருெரு தோஷமு மில்லையென்று சொன்னுள் அவ்வார்த்தைகளைக் கேட்டு சந்தோஷித்து தன் கணவரான ஆகாசராஜனிடம் சென்று, குறத்தி சொன்ன வார்த்தைகளையும், வகுளாதேவி வந்த விஷயத்லையும் தெரியப்படுத்தினுள் அப்போது ஆகாசராஜன் சந்தோஷமுற்றவராய் தன் புத்ரிகையை ஸ்ரீநிவாசனுக்கு கொடுத்து பாணிக்ரஹணம் செய்விக்க தன் மனதில் நிச்சயித்துக்கொண்டு, பிருஹஸ்பதியை அழைப்பித்து ஸ்ரீநிவாசனின் விருத்தாந்தத்தைக் கேட்டார். பிருஹஸ்பதி ராஜனைப்பார்த்து ஸ்ரீநிவாசன் விருத்தாந்தம் எனக்குதெரியாது, சுகமஹரிஷி சதா இந்த க்ஷேத்திரத்தில் வசித்து வருவதால் அவரிடம் ஸ்ரீநிவாசனுடைய விருத்தாந்தத்தை விவரமாய் தெரிந்துக் கொள்ளலாம் என்ருர். அப்போது இராஜன் தன் சகோதரனை தொண்டமானனைப் பார்த்து, நீ சுகாஸ்

ரமம் போய் ஆகாசராஜன் தன் மகள் பத்மாவதி விவாஹ விஷயமாய் பேச உங்களை அழைத்து வரும்படி சொன்னு ரென்று சொல்லி அழைத்வா யென்றனுப்பினுர். தொண்ட மானன் சுகாஸ்ரமம் சேர்ந்து, சுகமுனிவருக்கு நமஸ்கரித்து, ஆகாசராஜன் தன் மகள் பத்மாவதி விவாஹ விஷயமாய் தங்களுடன் பேச தங்களை அழைத்து வரும்படி என்னை அனுப்பினுரென்று சொல்லி, அவரை அழைத்துக் கொண்டு ஆகாசராஜன் கொலுவிற்குப் போய்ச் சேர்ந்தான்.

ஆகாசரான் சுக முனிவருக்கு தண்டப்பிரணுமங்கள் செய்து ஓர் ஆஸனத்தில் அமரச்செய்து, பத்மாவதியை சேஷாத்ரிவாசனுன ஸ்ரீனிவாசனுக்கு கன்னியாதானம் செய்ய நிச்சயிப்பதற்கு உங்களை அழைத்தேன்; ஸ்ரீனிவாச னின்; விருத்தாந்தம் தங்களால் கேட்டறிய விருப்பமுள்ளவ ஞய் இருக்கிறேனென்ருர். சுகமுனிவர் இராஜனைப் பார்த்து ஸ்ரீனிவாசன் பரப்பிரம்ம, சொரூபன்; பரமாத்மா; அவரை தரிசிக்க மஹான்கள் யக்ஞங்கள் செய்து, தவங்கள் செய்து, அநேக ஜன்மங்களெடுத்து சதா அவரையே தியா னித்து, சம்சார சாகரமென்கிற சமுத்திரத்தில் விழாமல், காமக்குரோத, லோப, மோஹ, மதமாஸ் சர்யங்களென்ற பாசங்களில் விழாமல் கந்தமூலங்கள் புசித்து அவரை தியா னிப்பவர்களும்கூட அவரை தரிசிக்க முடியாது, அப்படிப் பட்ட பகவான் உனக்கு மருமகனுய் வர நீ அநேக ஜன்மங்க ளில் செய்த பூஜாபலன் அல்லாமல் வேறில்லை; இந்த ஜன்மத் தில் உன் புத்திரியை ஸ்ரீனிவாசனுக்கு கன்னியாதானம் செய் தால் மாண்டுபோன உன் வம்சத்தாரும், இனி பிறப்பவர் களும் அந்த பகவானின் கிருபைக்கு பாத்திரராவார்கள். உன் புத்திரிகை பத்மாவதியை ஸ்ரீனிவாசனுக்கு கலியாணம் செய்வித்து உன் ஜன்மத்தை சாபல்ய மாகிக்கொல் உன் மூலமாய் உன் பிதுருக்கள் வைகுண்டவாச மடைவார்கள். தாமதம் செய்யாமல் உன் பந்துமித்திரர்களை அழைப்பித்து இக்காரி யத்தை நிறைவேற்றவும்; உன்னுல் நாங்களும் பகவானை தரிசிப்போமென்று கூறினுர். அப்போது இராஜன் பந்து மித்திரர்களை அழைப்பித்து அவர்களைப் பார்த்து, என் னுடைய பந்துக்களான உங்களுடைய அனுமதிபெற்று

என் மகளான பத்மாவதியை ஸ்ரீனிவாசனுக்கு கொடுத்து கன்னியாதானம் செய்ய நிச்சயித்துள்ளேன் நீங்கள் அனும தித்தால் நான் வாக்தானம் செய்வேனென்று சொன்னார். அப்போது பந்துக்கள் சந்தோஷத்துடன் இராஜனைப்பார்த்து உங்களிஷ்டப்படி எங்கள் அனைவருக்கும் சந்தோஷமென்று உறைத்தனர். அப்போது இராஜன் சபையில் "என் புத் திரிகை பத்மாவதியை சேஷாசலவாசனை ஸ்ரீனிவாசனுக்கு விவாஹம் செய்து கொடுப்பேன்" என்று பிரதிக்ஞை செய்தார். அப்போது பந்துமித்ர பரிவாரங்களனைவரும் சந்தோஷமடைந்து தங்களுடைய இருப்பிடம் சென்றனர். ஆகாசராஜன் அந்தப்புரம் சென்று தரணீ தேவியைப் பார்த்து, சேஷாசத்திலிருந்து வந்துள்ள வகுளாயேவிடம் இச்சுபச்செய்தியை சொல்லி அவளை சேஷாத்ரிக்கு அனுப் பும்படி சொன்னார். தரணீதேவி வகுளாதேவியைப்பார்த்து நீ வந்த காரியம் முடிந்தது, நீ சேஷாசலம் சேர்ந்து இச்செய் தியை ஸ்ரீனிவாசனுக்கு தெரியப் படுத்தென்று சொல்லி அவளை அனுப்பி வைத்தனள்.

## ஆகாசராஜன் ஸ்ரீனிவாசனுக்கு மண ஓலை எழுதி அனுப்புதல்

ஆகாசராஜன் சுக மஹரிஷியைப் பார்த்து, சேஷாத்ரி வாசனுக்கு ஒருமண ஓலை எழுதியனுப்பும்படி சொன்னார். சுகமுனிவர் மணஓலையை இவ்வாராக எழுதி அனுப்பினார்.

"ஸ்ரீ வேங்கடாசல வாசியான ஸ்ரீனிவாசனுக்கு ஆகாச ராஜன் செய்யும் ஆசிர்வாதங்கள். உங்கள் பந்து மித்திரர்க ளுடைய க்ஷேமங்களைக் கோரி எழுதுவது, உங்களுடைய அனுக்கிரகத்தால் க்ஷேமமாக யிருக்கின்றோம். உம்முடைய சுக க்ஷேமங்களை எழுதக் கோருகின்றோம். இச் சுபச்செய்தி சைத்ர சுத்த திரயோதசி தினத்தன்று எழுதினது, என் புத்ரி பத்மாவதியை உனக்கு கொடுத்து கன்னியாதானம் செய்யவேண்டுமென்று என் விருப்பம், நீ இதற்கு சம்ம

நித்து வைசாகமாதம் சுக்லபக்ஷ தசமி சுபதினத்தில் நீ இச் சுபச்செய்தியை பெற்று சுகமுனிவர் சொற்படி செய்யவும்.

இப்படிக்கு,

**ஆகாசராஜன்.**

இப்படியாக ஓலையெழுதி சுகமுனிவரிடம் கொடுத்து சிறிது தூரம் சுகமுனிவருடன் சென்று எப்படியாகிலும் ஸ்ரீனிவாசனை ஒப்புக்கொள்ளச் செய்து இக்காரியத்தை நிறைவேற்றுவது உங்களைச் சேர்ந்ததென்று சொல்லி சுக முனிவரை வழியனுப்பினர். சுகமுனிவர் மண ஓலையுடன் சேஷாசலம் சென்று, ஸ்ரீனிவாசனை சந்தித்தார். ஸ்ரீனி வாசன் சுகமுனிவரைப் பார்த்து நமஸ்கயுத்து, ஆலிங்கனம் செய்துக்கொண்டு காரியம் ஸபலமாயென்று கேட்டார், சுக முனிவர் ஸ்ரீனிவாசனுக்கு நமஸ்கரித்து, ஸகலத்தையும் ரக்ஷிக்க வல்லவரான உன் காரியம் ஸபலமாகாமல் விபல மாகுமா? யென்று சொல்லியவாறே ஆகாசராஜன் கொடுத்த மண ஓலையை ஸ்ரீனிவாசனிடம் கொடுத்தார். பகவான் மண ஓலையைப் பார்த்து சந்தோஷித்து, சுகமுனிவரை தன் நிவாசத்திற்கு அனுப்பினர். பிறகு சிறிது நேறத்திற்கெல் லாம் வகுளாதேவி ஸ்ரீனிவாசனை சந்தித்தாள். ஸ்ரீனி வாசன் வகுளாதேவியைப் பார்த்து போனகாரியம் என்ன வாயிற்றென்று வினவினர் குமாரா! அதி பிரயாசையுடன் போனகாரியம் பலித்ததென்றுள். பகவான் வகுளாதேவி யைப் பார்த்து அம்மா! இனி விவாஹத்திற்கு வேண்டிய வேலைகளைச்செய்ய உனக்கு மிகவும் கடினமாயிருக்கும்; நான் பிரம்மாதி தேவர்களை அழைப்பித்து இந்த விவாஹ காரியங்களை முடிக்க எண்ணியிருக்கிறேனென்று சொல்லி, சேஷ கருடர்களை அனுப்பி பிரம்மாதி தேவர்களை அழைத்து அவர்களைப் பார்த்து ஆகாசராஜன் புத்திரிகையை நான் விவாஹம் செய்துக்கொள்ள நிச்சயித்திருக்கிறேன்; நம் பந்து மித்திர பரிவாரங்களுடன் ஆகாசராஜன் பட்ணம் போகவேண்டும். இவ்விடம் செய்யவேண்டிய காரியங்களை

னை நிறைவேற்றிக் கொண்டு, இந்த சைத்ர சுத்த திரயோதசிக்கு முன் நாம் அவ்விடம் சேர வேண்டுமென்று சொல்லி பிரம்மதேவனைப் பார்த்து இவ்விவாஹத்திற்கு என்னிடம் தனமில்லை, நீ இக்காரியத்தை பூர்த்திசெய்ய பணம்கடனாக கொண்டுவர வேண்டுமென்றார். அப்பொழுது தேவர்கள் சந்தோஷமடைந்தனர். பிரம்மதேவன் குபேரனை பார்த்து இவ்விவாஹத்திற்கு வேண்டிய தனம் கடனாக ஸ்ரீனிவாசனுக்கு கொடுக்க வேண்டுமென்று கேட்க, குபேரன் பிரம்மதேவனைப் பார்த்து வெறும் வாய்பேச்சில் பணம்கொடு என்று கேட்பது சுலபம், ஆனால் கொடுப்பவர்களுக்கு கஷ்டமாயிருக்கும், கடனுக்கு பொன் அல்லது கிருஹங்கள் பூமி முதலியவைகள் ஈடாக வைக்கவேண்டும் இல்லாவிட்டால் கடன் கொடுக்க முடியாது என்று சொன்னார். அப்போது பிரம்மதேவன் ஸ்ரீனிவாசனிடம் தனகனக வஸ்து வாஹனங்கள் நிதிகள் எதுவும் கிடையாது; கடன் பத்திரத்தின் மேல் ஒரு கோடி பதினான்கு லக்ஷம் வராகன்கள் கடன் கொடுக்க வேண்டும். அம்மொத்தத்திற்கு ஒவ்வொரு வருஷமும் வட்டி மாத்திரம் லக்ஷம் வராகன்கள் செலுத்திக் கொண்டு, கலியுக அந்தியத்தில் அசல் உனக்கு கொடுத்து விடுவதாய்ச் சொல்லி, கடன் பத்திரமெழுதி அதில் பிரம்மதேவன் ஒரு சாக்ஷியாயும், புஷ்கரணியின் கரையிலுள்ள இரண்டு அஸ்வத்த மரங்களும் இரண்டாவது சாக்ஷிகளாய் நியமித்து ஒருகோடி பதினான்கு லக்ஷம் வராகன்கள் பெற்று, விவாஹத்திற்கு வேண்டிய எல்லாவற்றையும் சித்தப்படுத்தினார்கள் ஆனாலும் லக்ஷ்மிதேவி இல்லையென்ற சிந்தனை மாத்திரம் ஸ்ரீனிவாசனை வேதனை படுத்தி வந்தது. இவ்விஷயமாய் பிரம்மா தெரிந்துக் கொண்டு, தேவர்கள் ஒவ்வொருவரையும் ஒவ்வொரு காரியத்திற்கு நியமித்து, ஸ்ரீனிவாசனுக்கு மங்கள ஸ்நானம் செய்விக்க யாவரையும் நியமிக்கவில்லை. பிரம்மதேவன் ஸ்ரீனிவாசனைப் பார்த்து சர்வமும் சித்தமாயிருக்கின்றது இனி நீ மங்கள ஸ்நானம் செய்யென்று கேட்டுக்கொண்டார். அப்போது ஸ்ரீனிவாசன் லக்ஷ்மியைக் குறித்து சிந்தனை

அடைந்தார். பிரம்மதேவன் ஸ்ரீனிவாசனைப் பார்த்து, எதற்காக இப்படி சிந்திக்கிறாய்; நான் இருக்கிறேன் மங்கள ஸ்நானம் செய்விக்கிறேனென்று கூற, பிரம்மா தன்னை பரிகசிக்கிறானென்று நினைத்து, சூரியனை அழைத்து நீ கரவீர புரம் சென்று அங்கு வசித்துவரும் லக்ஷ்மியிடம் ஸ்ரீனிவாசன் தேக அசௌகர்யமுற்று பரிதவிக்கிறரென்று சொல்லி லக்ஷ்மியை அழைத்துவரும்படி கூறினார். சூறியன் ஸ்ரீனி வாசனைப்பார்த்து, அவள் லோகமாதா; அவளிடம் நான் எப்படி பொய்ச் சொல்லுவேன்; சௌக்கியமாயுள்வரை அசௌக்கியமாக யிருக்கிறானென்று எப்படி சொல்வேன் என்று சொல்ல உனக்கேன் அந்த ஸம்ஸயம் அவள் இவ் விடம் வருவதற்குள் நான் அசௌகியமுற்றவன்போல் தோன்றுகிறேன், நீ அங்குபோய் அவளை அழைத்துவா யென்று சொல்லி கரவீரபுரத்திற்கு அனுப்பினார்.

சூறியன் கொல்லாபுரமென்கிற கரவீரபுரம் போய்ச் சேர்ந்து, லக்ஷ்மிக்கு நமஸ்கரித்து ஸ்ரீனிவாசன் அசௌகர்ய முற்று உங்களை அழைத்து வரும்படி என்னை அனுப்பினு ரென்று சொல்லி, லக்ஷ்மியை ரதத்தின் மேலேறிக் கொண்டு வரும்போது, ஸ்ரீனிவாசன் பிரம்மா, ஈஸ்வரன் இருவரை யும் அழைத்துக்கொண்டு எதிரே சென்றார். லக்ஷ்மி தன் கணவரின் வரவைப் பார்த்து ரதத்திலிருந்து இறங்கி, அவருக்கு நமஸ்கரித்து அவர்பாதங்களை கழுவி தீர்த்தம் பெற்றுக்கொண்டு மல்லிகை புஷ்பங்களால் பூஜித்து, கபட நாடக சூத்ரதாரியைப் பார்த்து என்னை அழைத்த காரணம் யாது? என்று வினவினாள். ஸ்ரீனிவாசன் லக்ஷ்மியைப் பார்த்து, ராமாவதாரத்தில் உனக்கு கொடுத்த வரத்தை நிறைவேற்ற சமயம் வந்ததால் உன்னிஷ்டப்படிவேத வதியை விவாஹம் செய்துக் கொள்ள நிச்சயித்து, உன்னை இவ்விடத்திற்கு அழைப்பித்தேன் என்று சொன்னார் அதைக் கேட்டு லக்ஷ்மி சந்தோஷித்தாள். ஸ்ரீனிவாசன் சதுர்முகனைப் பார்த்து காலதாமதமாகிறபடியால் விவாஹ காரியங்களை கவனிக்கும்படி கூறினார். பிரம்மதேவன் லக்ஷ்மியைப் பார்த்து ஸ்ரீனிவாசனுக்கு மங்கள ஸ்நானம் செய்விக்கும்

படி சொன்னர். ஸ்ரீநிவாசனை நவரத்தின பீடத்தில் உட்காரச் செய்து, தேவர்களால் சுகந்த தீர்த்தங்களை தருவித்து, பார்வதி, சரஸ்வதி, சாவித்ரி முதலானவர்கள் கீதங்கள் பாட, மங்கள ஸ்நானத்திற்கு பிரயத்தனித்தார் ஆனுல் பகவானுக்கு யார் மங்கள ஸ்நானம் செய்விப்பதென்று எல்லோரும் சந்தேகத்துடனிருக்க, ஸ்ரீனிவாசன் சதுர்முகனைப்பார்த்து எனக்கு தாய் தந்தைகள், சகோதரர்கள் யாரும் இல்லையென்று துக்கமடைந்தார். அப்போது சதுர்முகன் ஸ்ரீனிவாசனைப் பார்த்து பந்துக்கள் இல்லையென்று துக்கிப்பது உங்களுக்கு தகாது; நீங்கள் ஏன் இப்படி காலதாமதம் செய்கிறீர்கள்? நாங்களெல்லோரும் உன்னுடைய பந்துக்களல்லவா? நீ பரமாத்மா; உன்னுடைய மனைவி லோகமாதா; இப்படிப்பட்ட உமக்கு இந்த உலகமே உம்முடைய சம்சாரமென்று சொல்லி, லக்ஷ்மியைப் பார்த்தார், அப்போது லக்ஷ்மி பகவானின் மனோபாவம் தெரிந்துகொண்டு, நீங்கள் ஏன் விசனப்படுகின்றீர்கள்? உங்களுக்கு நான் மங்கள ஸ்நானம் செய்விக்கிறேனென்று சொல்ல, பகவான் சந்தோஷித்து வசிஷ்டாதி முனிவர்களைப் பார்த்து, ஸ்நானத்திற்கு அனுமதிகொடுக்கும்படி கேட்டார். அப்பேது முனிவர்கள் ஸ்ரீனிவாசனுக்கு ஆசீர்வாதங்கள் செய்ய அநேக பரிமள திரவ்வியங்களுடனும் புண்ணிய தீர்த்தங்களுடனும் ஸ்ரீனிவாசனுக்கு ரமாதேவி மங்கள ஸ்நானம் செய்விக்க, முப்பது முக்கோடி தேவர்கள் ஸ்ரீனிவாசனைக் கொண்டாட, லக்ஷ்மீதேவியால் ஸ்நானம் செய்விக்கப்பட்டது. அப்போது குபேரன் வஸ்திரங்களையும் ஆபரணங்களையும பகவானுக்கு சமர்ப்பித்தான். ஸ்ரீனிவாசன் அவ் வஸ்திரங்களையும் அலங்கரித்துக் கொண்டு. முத்துக்களால் செய்த பீடத்தில் அமர்ந்து விதி பூர்வமாய் சங்கல்பம் ஆசரித்தார்.



# ஸ்ரீனிவாசன் தன் குலதெய்வத்தை

வசிஷ்டர் ஸ்ரீனிவாசனைப் பார்த்து உன்னுடைய குல தெய்வத்தை பூஜிக்கவேண்டுமாதலால், உன் குலதெய்வம் யாரென்று கேட்டார், ஸ்ரீனிவாசன் தன் குலதெய்வம் 'சமி' யென்று சொன்னார். அதற்கு அவர் குமாரதாரை தீர்த்தத்தில் இருக்கின்றது, நீ அவ்விடம் சென்று ஒரு கிளையைக் கொண்டுவாயென்று சொல்ல, ஸ்ரீனிவாசன் குமார தாரைக்கு சென்று அவ்விடமுள்ள சமீ விருக்ஷத்தை அங்கிருந்து ஒரு சிறிய கிளையைக் கொண்டுவந்து, வராஹ மூர்த்தியின் அனுமதிபெற்று சமீ விருக்ஷத்தை அவர் சமீபம் பிரதிஷ்டை செய்து பிரம்மதேவனைப் பார்த்து என் குல தெய்வப் பிரார்த்தனை தீர்ந்தது; இனி போஜனங்கள்செய்து ஆகாசராஜன் பட்டணம் போக வேண்டுமென்று சொல்லி, அக்கினி தேவனைப் பார்த்து வெகு சீக்கிரமாய் ஸகல பதார்தங்களையும் தயாரிக்கும்படி கூறினார். அக்கினிதேவன் ஸ்ரீனிவாஸனைப் பார்த்து போஜனம் தயார் செய்ய பாத்திரம் ஒன்றுகூட யில்லை, நான் எப்படி சகலமும் தயார்செய்வேன் என்று சொல்ல, அப்போது பகவான் அக்கினிதேவனைப் பார்த்து நான் மிகவும் ஏழை, என்னிடம் பாத்திரங்களாவது தனமாவது மற்றது ஏதுவுமில்லை என்ற செய்தி உங்களனை வருக்கும் தெரிந்த விஷயமல்லா, நான் என்னசெய்வேன்; நீ இப்படி செய்வாயாக: சுவாமி புஷ்கரணி அன்னபாத்திரம், பாபனாசன தீர்த்தம் சாம்பார் பாத்திரம், ஆகாசதீர்த்தம் பாயஸ பாத்திரம், தேவிதீர்த்தம் காய்கறி பாத்திரம், தும்புரு தீர்த்தம் சித்ரான்ன பாத்திரம், குமாரதாரை பருப்பு பாத்திரம் இவ்விதமாய் இந்த க்ஷேத்திரத்திலுள்ள 364 தீர்த்தங்களும் பாத்திரங்களாக முடிக்கும்படி கூறினார். அப்போது அக்னி ஹோத்திரன் வெகு சீக்ரமாய் அறுசுவை யுடன் போஜனம் சித்தம்செய்து, தேவர்களனைவரும் பாண்டவ தீர்த்தம் முதல் ஸ்ரீசைலம் வரை பந்தியாய் உட்கார்ந்தனர் அப்போது ஸ்ரீனிவாசன் பிரம்மதேவனைப் பார்த்து, நிவேதனம் செய்யாத பதார்த்தங்களை புசிக்க

கூடாது, ஆனதால் ஸமஸ்த பதார்த்தங்களையும் அஹோபில நரசிம்மமூர்த்திக்கு ஆராதனை செய்து புசிக்க வேண்டுமென்று கூறினர். பிரம்மதேவன் ஸ்ரீனிவாசன் கட்டளைப்படி சர்வ பதார்த்தங்களையும் அஹோபில நரசிம்மமூர்த்திக்கு ஆராதனை செய்து தேவர்கள் அனைவரையும் புசிக்கச் செய்து தேவர்களைப் பார்த்து நான் மிகவும் ஏழை எனக்குள்ள பதார்த்தங்கள் மிகவும் குறைவானதாலும் கிருபையுடன் புசித்ததற்கு தன்யனானேனென்று கூறினர். தேவர்கள் ஸ்ரீனிவாசனைப் பார்த்து நீ அளித்த போஜனம் அமிர்தத்திற்கு சமானம், நீ யேன் இவ்விதம் கபடநாடகமாடுகிருய் என்றனர். அப்போது ஸ்ரீனிவாசன் சந்தனதாம்பூலம் சமர்ப்பித்தார். அவர்கள் அதை ஸ்வீகரிந்து இத்தாம்பூலமே எங்களுக்கு முக்திபெற வழியென்று மொழிந்தனர் பிறகு ஸ்ரீனிவாசன் மனைவி, புத்திரர்களுடன் சேர்ந்து போஜனம் செய்தார். தேவர்களனைவரும் அன்று சேஷாத்ரியில் இருந்தனர்.

மறுநாள் காலை ஸ்ரீனிவாசன் பிரம்மதேவனைப் பார்த்து நாம் இனி ஆகாசராஜன் பட்டணம் போக வேண்டுமாதலால் சர்வமும் தயாராயிருக்க ஏற்பாடுசெய்யும்படி கட்டளையிட்டார். பிரம்மதேவர் சர்வமும் சித்தப்படுத்தி, ஸ்ரீனிவாசன் கருடன்மேல், பிரம்ம அன்னத்தின் மேலும் ஈஸ்வரன் நந்திகேஸ்வரன்மேலும் இப்படியாக தேவர்கள் அனைவரும் அவரவர்கள் வாஹனங்களின்மேல் புறப்பட்டு; சதுர்முகன் முன்பாகமும், தென்பாகம், ருத்திரனும் வலது புறம் வாயுதேவனும் இப்படியாக தேவர்களனைவரையும் அழைத்துக் கொண்டு, பேரிமிருதங்கம் முதலான மங்கள வாத்தியங்களுடன் சேஷாத்ரியிலிருந்து புறப்பட்டு செல்லும் போது மார்க்க மத்தியில் ரிஷிகள், முனிவர்கள், கந்தர்வர்கள் வித்தியாதரர் முதலானவர்கள் ஸ்ரீனிவாசனுடைய தரிசனர்த்தம் காத்திருந்து, பகவான் மேல் புஷ்பமாரி பொழிந்து ஜெய ஜெய கோஷங்கள் செய்ய ஸ்ரீனிவாசன் ஆனந்தத்துடன் அவர்களுக்குதரிசனம்தந்துசெல்லும்போது

பிரம்மதேவன் அவர்களை விவாஹத்திற்கு அழைத்துக் கொண்டு பகவானுக்கு முன்பாகம் போய்க் கொண்டிருக்கும் போது வழியில் பத்ம தீர்த்தத்தில் வசித்துவரும் சுகமுனிவர் ஸ்ரீனிவாசனுக்கு தண்டப்பிரணமங்கள்செய்து நீங்கள் புத்ரமித்ர களத்ராதி தேவர்களை அழைத்துக் கொண்டு போகும்போது அதைப் பார்க்கும் பாக்கியம் கிடைத்ததற்கு தன்யனுனேன் என் ஜன்மம் சாபல்யமாயிற்று; நீங்களனைவரும் இவ்விடமிருந்து போஜனம் செய்து போகும்படி கூறினர். பகவான் சுகமுனிவரைப் பார்த்து, நீ பிரம்மசாரி எங்களெல்லோருக்கும் போஜனம் செய்விக்க உனக்கு கஷ்டம்; நாங்களெல்லோரும் ஆகாசராஜன் இல்லத்திற்குபோய் போஜனம்செய்ய எண்ணிதாய்ச் சொன்னூர் அப்போது சுகமுனிவர் ஸ்ரீனிவாசனைப் பார்த்து நீர் சொன்னபடி நான் பிரம்மசாரிதான், உங்கள் எல்லோருக்கும் போஜனமளிப்பது கஷ்டமே. ஆனுலும் உங்களனுக்கிர்ஹத்தால் எனக்கு கஷ்டமென்றும் தோன்றது நீ அருந்தினல் இந்த பதினன்கு லோகங்களும் திருப்தி அடையும் ஆனதால் என்மேல் கருணை கூர்ந்து கந்தமூல பலாதிகளை சாப்பிட்டு போகவேண்டுமென்று பிரார்தித்தார் இவ்வார்த்தைகளைக் கேட்டு வகுளாதேவி பகவானைப் பார்த்து நீ சுகமுனிவரின் வார்த்தைகளை அவசியமாய் ஏற்க வேண்டும் உன் விவாஹகாரியங்களுக்கு முதலில் சுகமுனிவரின் மூலம் ஆகாசராஜன் சுபச் செய்தியை அனுப்பினர். அச் சுபச் செய்தியை முன்னிட்டு இப்போது விவாஹத்திற்கு ஆகாசராஜனுடைய பட்டிணத்திற்கு போகிருேமாதலால் முதலில் முனிவரின் இஷ்டப்படி நடப்பது தர்மமென்று சொன்னுள். அவ்வார்த்தைகளைக்கேட்டு ஸ்ரீனிவாசன் சுகமுன்வரின் பர்ணகசாலைக்குள் பிரவேசித்து பக்தியுடன் சுகமுனிவர் சமர்பித்த கந்தமூல பலன்களை உட்கொண்டார். இவ்விஷயத்தை பார்த்து தேவர்கள் சுகமுனிவரின்மேல் கோபமுற்றனர். அப்போது ஸ்ரீனிவாசன் தேவர்களை திருப்தி செய்ய எண்ணி ஏப்பம் விட்டார்; ஸ்ரீனிவாசன் முகத்திலிருந்து உண்டான காற்றுதேவர்களெல்லோரையும் திருப்திசெய்தது தேவர்கள் யாவரும் திருப்தி அடைந்து

சந்தோஷத்துடன் அவ்விடத்திலிருந்து புறப்பட்டு ஆகாச ராஜனுடைய பட்டிணத்திற்குபோய்க் கொண்டிருந்தனர்.

## ஆகாசராஜன் ஸ்ரீனிவாசனுக்கு பத்மாவதியை விவாஹம் செய்வித்தல்

நாராயணபுரத்தில் ஆகாசராஜன் நகர் முழுவதும் மிக வைபவமாக அலங்கரித்து, பந்தல்கள் போட்டு, முத்துக்களால் தோரணங்கள் கட்டி, தன் பிரஜைகளுக்கு நல்ல வஸ்திராபரணங்களைக் கொடுத்து, எவ்விடம் பார்த்தாலும் பரிமளிக்கும்படி அநேக வாசனைதிரவ்வியங்களை தெளிக்க வைத்தார். ஸ்ரீனிவாசர் சுகாஸ்ரமம் விட்டு புறப்பட்டு நாராயணபுரம் சமீபம் வந்துக்கொண்டிருந்தார். ஸ்ரீனிவாசன் வந்துக்கொண்டிருக்கும் விருத்தாந்தம் தெரிந்து ஆககாசராஜன் பகவானை வரவேற்க, பத்மாவதிக்கு மங்கள ஸ்நானம்செய்வித்து மிகவும் அழகானயானையின்மேலேற்றிக் கொண்டு சபரிவாரமாய் ஸ்ரீனிவாசனை எதிர்கொண்டு, சந்தித்து இப்படிச் சொல்லலுற்றார்; ஸ்ரீனிவாசா! என் பூஜா பலம் இன்று பலித்தது; என் ஜன்மம் சாபல்யமாயிற்று என் பந்துக்களுக்கும் மோக்ஷமாக்க முண்டாயிற்று; என் ராஜ்யமும் பிரஜைகளும் பவித்திரமடைந்தனர் என்று அநேக விதங்களில் ஸ்துதித்து, பத்மாவதிக்கு ஸ்ரீனிவாசனின் புனர்தரிசனம் செய்வித்து, சகலாபரணமும் அணிந்த பத்மாவதியையும், ஸ்ரீனிவாசனையும் நாராயணபுரத்தில் ஊர்வலத்துடன் அழைத்த வந்து ரத்னகசிதமான ஒரு மாளிகையில் பிரவேசிக்கச் செய்தார். இதற்குள் ஸ்ரீனிவாசன் தொண்டமானனைப் பார்த்து நாங்களனைவரும் பசியால் களைப்புற்றிருக்கிறோம் விரைவில் எங்களுக்கு போஜனத்திற்கு ஏற்பாடுசெய் யென்று சொல்ல, தொண்டமானன் ஸ்ரீனிவாசனைப் பாத்த்து போஜனாதிகள் சித்தமா யிருக்கின்றன, எல்லோரும் போஜனத்திற்கு எழுந்தருள வேண்டுமென்று சொன்னான். தேவர்களனைவரும் ஸ்நானம் செய்து போஜனத்திற்கு வர, தொண்டமானன் தேவர்களுக்கு

அன்புடன் அநேகவித பணியாரங்களோடு போஜனமளித்து எல்லோரையும் திருப்தி செய்து சந்தன தாம்பூலங்கள் கொடுத்து அவரவர்களுடையவிடுதிக்குஅனுப்பிவைத்தநன் ஸ்ரீனிவாசனுக்கு மாத்திரம் தனியாக விடுதிமாளிக்கைக்கு போஜனாதிகள் அனுப்பிவைத்தனர் அவ்விடம் ஸ்ரீனிவாசன், லக்ஷ்மி, வகுளாதேவி இம்மூவரும் போஜனம் செய்து அன்றிரவு அவ்விடமே இருந்தனர்.

மறுநாள் காலே ஸ்ரீனிவாசன் வசிஷ்டரைப் பார்த்து இன்று நான், லக்ஷ்மி பிரம்மா, என்தாய் புரோஹிதர் நாங்கள் ஐவரும் போஜனமருந்தக் கூடாது அப்படியே ஆகாசராஜன், தரணீதேவி, பத்மாவதி, வசுதானன், புரோஹிதர் இவ்வைந்துபேரும் போஜனமருந்தக் கூடாது, இன்று இரவுபதிமூன்றுநாழிகைக்கு முகூர்த்தம்; அப்போது பிராம்மண போஜனம் சாத்தியமாகாது முகூர்த்தத்திற்கு முன்பு அவர்களுக்கு போஜன சௌகர்யங்கள் செய்ய ஆகாசராஜனுக்கு இவ்விஷயா் தெரிவித்தான். இராஜன் ஸ்ரீனிவாசன் சொல்லியவாரே பிராம்மணர்களுக்கு போஜன சௌகாயம் செய்து சந்தன தாம்பூலங்கள் கொடுத்து அவர்களை திருப்தி செய்தான்; தேவர்களனைவரும் சந்தோஷமடைந்தனர்

தரணீதேவி மங்கள ஸ்நானம் செய்து ஸகலாபரணங்களையும் அணிந்து, ஸ்ரீனிவாசனுக்கு பாதபூஜைசெய்ய, பிராம்மணரிடம் பொற்குடங்களைக் கொடுத்து பல புண்ணிய தீர்த்தங்களை தருவித்தாள். அத்தீர்த்தங்களைக் கொண்டு ஆகாசராஜன் ஸ்ரீனிவாசனின் பாதங்களை கழுவி, அத்தீர்த்தத்தை பந்து மித்ரர்களின்மேல் தெளித்து, அவர்கள் பவித்திரராணூர்கள் என்று சந்தோஷமடைந்தார். பிறகு ஸ்ரீனிவாசனுக்கு அநேகவிதங்கலே யுயர்ந்த ஆபரணங்கள் ஹஸ்தகங்கணங்கள், கர்ணபூஷணங்கள், முத்து மாலைகள் பச்சைகள். வஜ்ர வைடூரியங்களுடன் கூடிய நாகாபரணங்கள். பாஜிபந்துக்கள். மோதிரங்கள. பட்டு பீதாம்பரங்கள் பாரமான நவரத்தின கிரீடம்; அநேக தங்கபாத்திரங்கள்

சமர்ப்பித்து, சுப முகூர்த்தத்தில் பத்மாவதியை ஸ்ரீனிவாச னின் தெற்கு பாகத்தில் வீற்றிருக்க செய்தார் பிறகு இருவருக்கு கங்கணங்கள்கட்டி பிரம்மாது தேவர்கள் மங்களாசீர்வாதங்கள் செய்ய, பேரி, மிருதங்காதி வாத் யங்கள் முழங்க, ரம்பை, ஊர்வசி மேனகை திலோத்தமாதி தேவதாசிகள் நாட்டியமாட, தும்புரு நாரதர் கானம் செய்ய கருட கந்தர்வாதி சித்த வித்யாதரர்கள் ஸ்ரீனிவாசன்மேல் புஷ்பங்கள் இரைக்க, சுப முகூர்த்தத்தில் பத்மாவதிக்கு ஸ்ரீனிவாசன் மாங்கல்ய தாரணம் செய்தார். அப்போது தேவர்கள் ஸ்ரீனிவாச பத்மாவதியின்மேல் நவரத்னங்க ளான, அக்ஷதைகளை போட்டனர். பிறகு சப்தரிஷிகள் ஹோமங்களை சாஸ்திர முறைப்படி நடத்தினர். பிராம்ம ணர்களுக்கு தக்ஷிணைகள் சமர்ப்பித்து சந்தோஷப் படுத்திய ஆகாசராஜனுக்கு அநேகவிதங்களில் பிராம்மணர்கள் ஆசீர் வாதம் செய்தனர் பிறகு அவரவர்கள் கிருஹங்களுக்குச் சென்றனர். ஆகாசராஜன் பந்துமித்திர்களுக்கு போஜ னங்கள் செய்வித்தனர். இப்படி ஐந்து நாட்கள் தேவாகள், பிராம்மணர்கள், ஆகாசராஜன் கிருஹத்தில் மஹா வைப வத்துடன், ஆனந்தமான வேடிக்கைகளுடன் கடத்தினர். பிறகு ராஜன் பத்மாவதியை ஐராவதத்தின் மேலேற்றி ஸ்ரீனிவாசனுடைய விடுதிக்கு அனுப்பிவைத்தார். ஸ்ரீனி வாசன் சேஷாசலம்போக எண்ணி, பத்மாவதி சமேதமாய் ஆகாசராஜனிடம் சென்று; நாங்கள் பந்துமித்திரர்களுடன் சேஷாசலம் போகிறோம் என்று சொல்ல, ஆகாசராஜனும் தரணிதேவியும் பத்மாவதியை ஆசீர்வதித்து ஸ்ரீனிவாசனைப் பார்த்து உன்னை நாங்கள் எப்படி ஆசீர்வதிப்பதோ தெயரி வில்லை உன் ஆசீர்வாதத்தால் சர்வலோகங்களும் சர்வ பூதங்களும், சர்வதேவர்களும், சர்வமானவர்களும், சுரக்ஷிதமாயிருக்க, உன் ஆசீர்வாதமே எங்களுக்கு பரம பாக்யமென்று சொல்லி ஸ்ரீனிவாசனை அவருடைய விடுதிக்கு அனுப்பி, மிக்க ஸ்ரீதனத்துடன் ஆகாசராஜன் தன் மகளை அழைத்துக் கொண்டு ஸ்ரீனிவாசனிருக்கும் விடுதிக்கு சென்று ஸ்ரீதனத்தை அவ்விடம் வைத்தார் ஸ்ரீனி

வாசன் ஆகாசராஜனைப் பார்த்து, நீங்கள் இவ்வளவு பிரயாசைப்பட்டு இந்த ஸ்ரீதனத்தை எடுத்துவர வேண்டுமோ? உம்முடைய குமாரனிடம் அனுப்பலாகாதா என்றார்? அவ்வார்த்தைகளைக் கேட்டு இராஜன் என் புத்திரியை உனக்கு கன்னியாதானம் செய்தால் எனக்கு மிகவும் சந்தோஷமாயிற்று; அதலால் நான் இவ்விதம் எடுதது வந்தேன் என்று சொல்ல, ஸ்ரீனிவாசன் ஆகாசராஜனைப் பார்த்து நான் சொன்ன வார்த்தைகளை சந்தேகிக்க வேண்டாம். உனக்கு இஷ்டமான வரத்தைகேள் என்றார் அதற்கு ஆகாசராஜன் உன்னுடைய அனுக்கிரஹத்தால் யங்களுக்கு மங்களமுண்டாகும்; நான் உம்மைகேட்க்க வேண்டியது ஒரே வரம் தான்; நானும் என் பந்துக்களும் என் ராஜ்ஜியத்திலுள்ள பிரஜைகளும் உன்னை மரவாமலிருக்க வரம் கொடுக்கும்படி கேட்டுக்கொண்டார் ஸ்ரீனிவாசன் சந்தோஷமடைந்து அப்படியே ஆகட்டுமென்று சொல்லி, அவரை அனுக்குரஹித்து, ஆகாசராஜனின் குமாரன் வசுதானனுக்கு பட்டு பிதாம்பரங்கள் கொடுத்து, ஆசிர்வதித்து அனுப்பினர்

ஸ்ரீனிவாசன் ஆகாசராஜனுடைய நகரிலிருந்து புறப்பட தான்யங்கள், நெய், எண்ணை, சர்க்கரை, வெல்லம், புளி, பரிமள திரவ்வியங்கள் முதலியவைகளை தாதிமார்களும் சேவகர்களும் எடுத்துக் கொண்டு பின் தொடர்ந்தனர் அப்போது ஸ்ரீனிவாசன், பிரம்மா ருத்திரர்களைப் பார்த்து, விவாஹ தீக்ஷைக்ஷ தீரும்வரை பர்வாதாரோஹணம் செய்யக் கூடாதென்றும்; இந்த ஆறு மாதங்களும் அகஸ்தியாஸ்ரமத்தில் இருப்பதாய்ச் சொல்லி, அகஸதியாஸ்ரமத்திற்கு போய் சேர்ந்து, பிரம்மாதி தேவர்களை வஸ்திராபரணங்களால் சன்மானித்து அவரவர்களுடைய ஙிவாசத்திற்கு போகும்படி கட்டளைவிட்டார். அப்போது பிரம்மாதி தேவர்கள் ஸ்ரீனிவாசனை அநேகவிதங்களில் தோத்திரம் செய்து அவரவர்களுடைய நிவாஸத்திற்கு சென்றனர். ஸ்ரீனிவாசன் லக்ஷ்மீதேவியைப் பார்த்து, உனக்கு கொடுத்த வரத்தினல் எனக்கு ஒரு நன்மையாயிற்று, சிலகாலம் பத்மா

வதியுடன் சுக துக்கங்களனுபவிக்க வேண்டி யிருக்கிற தென்று சொல்லிய ஸ்ரீனிவாசனைப் பார்த்து லக்ஷ்மி, இந்த பத்மாவதி எனக்காக ராவணனிடம் அநேககஷ்டங்களை அனுபவித்தாளல்லவா? எனக்காக நீங்கள் அவளை விவாஹம்செய்துக் கொண்டு, என் கோரிக்கையை நிறை வேற்றியதற்கு நான் சந்தோஷமானேனென்று நாதனுக்கு நமஸ்கரித்து, அவருடைய அனுமதி பெற்று கொல்லாபுரம் போய்ச் சேர்ந்தாள்.

## ஸ்ரீனிவாசனும் பத்மாவதியும் அகஸ்தியாஸ்ரமத்தில் வசித்தல்

ஸ்ரீனிவாசனும் பத்மாவதியும் அகஸ்தியாஸ்ரமத்தில் சுகமாய் காலங்களித்து வந்தனர். இப்படியிருக்க நாராயண புரத்திலிருந்து ஒரு சேவகன் அகஸ்தியாஸ்ரமத்திற்கு வந்து ஸ்ரீனிவாசனுக்கு நமஸ்கரித்து, உம்முடைய மாமனரான ஆகாசராஜன் மரணாவஸ்தையிலிருப்பதாய்ச் சொல்லி, ஸ்ரீனி வாசன் பத்மாவதியையும் அழைத்துக் கொண்டு நாராயண புரம் சேர்ந்து, ஆகாசராஜனைப் பார்த்து அவரிடம் பேசத் தொடங்கினர்; இராஜன் தன் சரீரத்தின்மேல் உணர்ச்சி யிலாமலிருப்பதைக் கண்டு மிகவும் துக்கித்தார். அப்போது ராஜன் கண் திறந்து ஸ்ரீனிவாசனைப் பார்த்து, என் குமாரனும் என் சகோதரனும் உனக்கு மித்திரர்கள், அவர்களை காப்பாற்றுவது உன் கடமை என்று சொல்லி அவர்களை ஸ்ரீனிவாசனுக்கு ஒப்புவித்து, மனைவியை பார்த்து உடன்கட்டை ஏற அனுமதி கொடுத்து மரணமடைந்தார். பிறகு தரணீதேவி புருஷனுடன் உடன்கட்டை ஏற, சுவர்க்க லோகத்திலிருந்து புஷ்பவிமானம் வர, அவர்கள் அவ் விமானமேறி சுவர்கலோகம் போய்ச் சேர்ந்தனர். அவர் களுக்கு உத்திரக்கிரியைகள் விதிப்படி நடத்தினர்.

ஆகாசராஜன் இறந்த பிறகு ராஜ்ஜியத்தை இராஜ னுடைய தம்பியான தொண்டமானன் பரிபாலிக்க

வேண்டுமா அல்லது இராஜனுடைய குமாரன் வசுதானன் பரிபாலிக்கவேண்டுமா யென்று, தொண்டமானன் வசுதானனிருவருக்குள் கலகமேற்பட்டு கடைசியில் யுத்தம் செய்ய ஆயத்தமாய் ஸ்ரீனிவாசனிடம் சென்று, இருவரும் ஸ்ரீனிவாசனின் சகாயம் கோரினர். ஸ்ரீனிவாசன் ஒன்றும் சொல்லத் தோன்றுதவராய் சங்கு சக்கரங்களை தொண்டமானனுக்கு சகாயமாய் கொடுத்து ஸ்ரீனிவாசன் வசுதானனுக்கு உதவிசெய்வதாய் சொன்னார். அவர்களிருவரும் யுத்தம் செய்யும்போது தொண்டமானன் விட்ட அஸ்திரத்தினால் ஸ்ரீனிவாசன் பூமியின்மேல் விழுந்து மூர்ச்சையடைந்தார். பத்மாவதி இவ்விஷயம் தெரிந்துகொண்டு அகஸ்தியரை அழைத்துக்கொண்டு யுத்தகளத்தில் மூர்ச்சையடைந்துள்ள ஸ்ரீனிவாசனைப் பார்த்து துக்கித்தாள். ஸ்ரீனிவாசன் மூர்ச்சையினின்றும் எழுந்து பத்மாவதியைப் பார்த்து ஸ்ரீகள் யுத்தகளத்திற்கு வரக்கூடாது, நீ யுத்தகளத்திற்கு என்னைப்பார்க்க வந்தது தகாது என்று கோபித்தார் இதற்குள் அகஸ்தியர் ஸ்ரீனிவாசனைப் பார்த்து உமக்கு தெரியாதது ஒன்றுமில்லை, தொண்டமானனையும் வசுதானனையும் சாந்திசெய்ய நிச்சயித்து பத்மாவதியை இவ்விடம் அழைத்து வந்தேன்; சாந்தி செய்விப்பது நம்முடைய கடமை, அவர்களை அழைப்பித்து அவர்களுடைய மனோபீஷ்டத்தை அறிய இவ்விடம் பத்மாவதி வந்திருக்கிறுளென்றுர். அவ்வார்த்தைகளைக் கேட்டு, தொண்டமானனையும் வசுதானனையும் அழைப்பித்து அவர்களுடைய மேனுபாவத்தை கேட்க; அவர்கள் ஸ்ரீனிவாசனைப் பார்த்து நாங்களிருவரும் உங்களிஷ்டப்படி நடப்போம், எங்கள் மனேபாவத்தை தெரிவிப்பது உசிதமில்லை ஆகாசராஜன் இறந்த பிறகு எங்களுக்கு நீங்களே தந்தை போன்றவர், உம்மிஷ்டப்படியே நாங்கள் நடக்கிறேமென்று சொல்லி இருவரும் வணங்கினின்றனர் அப்போது ஸ்ரீனிவாசன் அவர்களை ஆலிங்கனம் செய்து கொண்டு ஆகாசராஜனுக்குள்ள சர்வமும் நீங்களிருவரும் சமானமாய் அனுபவிப்பது தருமமென்று சொல்ல அவர்களதற்கு சம்மதித்து ஸ்ரீனிவாசன் இஷ்டப்படி தொண்டமானனுக்கு

தொண்ட ராஜ்யத்தையும் வசுதானனுக்கு சோழராஜ்யமும் கொடுத்து அவர்களை ஆசிர்வதித்து அகஸ்தியாஸ்ரமம் போய்ச் சேர்ந்தார்.

## தொண்டமானன் ஸ்ரீனிவாசனுக்கு ஆலயம் கட்டுவித்தல்

இப்படியாக சில காலம் கடந்த பிறகு, தொண்டமானன் ஸ்ரீனிவாசனை பார்க்க எண்ணி, அகஸ்தியாஸ்ரமம் சென்று, ஸ்ரீனிவாசனுக்கு நமஸ்கரித்தார். ஸ்ரீனிவாசன் தொண்டமானனைப் பார்த்து க்ஷேமசமாச்சாரங்களை விசாரித்து ஆகாசராஜன் இறந்ததற்குசிந்தையுற்று, நீ வந்தகாரியம் என்னவென்று கேட்க, தொண்டமானன் ஸ்ரீனிவாசனைப் பார்த்து நீங்கள் புராண புருஷனென்றும் பரமாத்மாவென்றும் வேதவேத்யனென்றும் மோக்ஷபிரதனென்றும் முனிவர்களால் கேள்வியுற்று உம்மை தரிசிக்க எண்ணி வந்தேனென்றான் அப்போது பகவான் தொண்டமானனைப் பார்த்து, உன் சகோதரன் எனக்கு விவாஹம் செய்வித்து கிருஹஸ்தனாக்கினார்; எனக்கு வசிக்க கிருஹமில்லை; ஆகாசராஜன் மருமகன் ஊரார் கிருஹங்களில் வசித்து வருகிறானென்று அபகீர்த்தி யுள்ளது; நீ மாளிகை நிர்மித்து கிருதார்த்தனாவாயாக! உன்னைத் தவிர இக்காரியத்தை நிறைவேற்றுபவர் யாருமில்லை. இக்கீர்த்தியை அனுபவிகக நீயே தகுதியுள்ளவன். உன்னைத்தவிர வேறுயாரும் அனுபவிப்பது துர்லபம் என்றார். அவ்வார்த்தைகளை கேட்ட தொண்டமானன் மாளிகை நிர்மிக்கிறேனென்று சொல்லி; தங்களுக்கு மாளிகை கட்டவேண்டிய ஸ்தலத்தைக் காட்டினால் தவராமல் கோவில் கட்டுகிறேனென்று கூற, ஸ்ரீனிவாசன் பத்மாவதியுடன் தொண்டமானனையும் அழைத்துக்கொண்டு சேஷாத்ரி சேர்ந்து, தான் வசித்துவந்த புற்றைக்காட்டி அவ்விடம் ஆலயம் கட்டும்படியாகவும், ஆலய கிழக்கு முகமாய் இருக்கவேண்டுமென்று, புற்று இருந்த இடத்தில்

ஆனந்தநிலயமும் அதைச்சுற்றிலும் முதல் பிராகாரமும், முதல் பிராகாரத்தில் வைகுண்டதுவாரமும் இரண்டாம் பிராகாரத்தில் மடப்பள்ளி, யக்ஞசாலைகள், பரிமளகிருஹம், கல்யாண மண்டபம் கட்டி மூன்றும் பிராகாரத்தில் ஆஸ்தான மண்டபங்கள், தான்யசாலைகள், விசேஷகாலங்களில் உபயோகிக்க பெரிய பலஹாரசாலைகளும் கட்டவும்; ஆல யத்திற்கு மூன்று பிராகாரங்கள், ஸப்ததுவாபரங்கள், இரண்டு கோபுரங்கள் ஒரு துவஜஸ்தம்பம் நிர்மித்து; நீ முன் ஜன்மத்தில் நிர்மித்த இந்த பூந்தோட்டத்தை புனருத்த ரிக்கும்படி சொல்ல, தொண்டமானன் ஆச்சரியமுற்றவனாய் முன் ஜன்மத்தில் நானெப்படி இந்த பூந்தோட்டத்தை ஏற்படுத்தினேனென்று கூறும்படி ஸ்ரீனிவாசனைக் கேட்க, ஸ்ரீனிவாசன் தொண்டமனனைப் பார்த்து இப்படி சொல்லலுற்றார்.

பூர்வம் வைகானஸரென்னும் ரிஷி கிருஷ்ணாவதார மஹாத்துமியத்தைக் கேட்டு, கிருஷ்ண ரூபத்தில் பகவானை தரிசிக்க எண்ணி, சோழராஜ்யத்தில் கோரதவம் செய்து வந்தார். அவருடைய தவத்திற்கு மெச்சி பகவான் பிரத் யக்ஷமானார். அப்போது வைகானஸரிஷி விஷ்ணுவுக்கு நமஸ்கரித்து, நான் கிருஷ்ண ரூபத்தில் உங்களை தரிசிக்க வேண்டுமென்று கேட்டார். விஷ்ணுதேவன் அந்த ரிஷியைப் பார்த்து, நீ கிருஷ்ணாவதாரத்தை தரிசிக்க முடியாது; ஸ்ரீனிவாச ரூபத்தை பூஜித்து, தரிசிக்கும்படி சொல்லி, கிருஷ்ணன் ஸ்ரீனிவாச ரூபத்தில் சேஷாத்ரியில் நிவாசித்து வருவதாயும் சொல்லி மறைந்தார். அவ்வார்த் தைகளைக் கேட்ட வைகானஸ ரிஷி சேஷாசலத்திற்கு போய்க்கொண்டிருந்தார் ரங்கதாஸனென்ற பக்த னொருவன் வைகானஸரிஷியை சந்தித்து சுவாமீ! நீங்கள் எங்கு செல்கிறீர்களென்று கேட்க்க, அவர் நான் ஸ்ரீனி வாசனை தரிசிக்க சேஷாத்ரிக்கு போய்க் கொண்டிருக்கிறே னென்று சொன்னார். அப்போது ரங்கதாஸன் அவருக்கு நமஸ்கரித்து நானும் சேஷாசலம் போக வேண்டுமென்று சொல்லி, அவரை பின் தொடர்ந்தான். கொஞ்சதூரம்

போய், ரங்கதாஸன் அவருடன் சுவாமீ! நீங்கள் என்ன காரியார்த்தமாய் சேஷாத்ரிக்கு போய்க்கொண் டிருக்கி றீர்களென்று கேட்க்க அதற்கு வைகானஸரிஷி நான் சில காலம் அவ்விடம் வசித்து, ஸ்ரீனிவாசனை பூஜித்து அவரை தரிசிக்க சேஷாத்ரிக்கு போவதாய் சொன்னார், அவ்வார்த் தைகளை கேட்டு ரங்கதாசன் இவருடன்சென்று நாமும் ஸ்ரீனிவாசனை தியானித்து தரிசிக்கலாமென்று யோசித்து சுவாமி அப்படியானால் நானும் அவ்விடம் சிலகாலம் நிவா சிக்க எண்ணியுள்ளேன்; நான் உங்களுக்கு வேண்டிய சகாயம் செய்கிறேனென்று கூற, அதற்கு அவர் சம்மதிக்க இருவரும் சேஷாத்ரிபோய்ச் சேர்ந்தார்கள், வைகானஸ ரிஷி ரங்கதாசனைப்பார்த்து பகவானைப் பூஜிப்பதற்கு புஷ்பங் கள் வேண்டும்; புஷ்பங்களால் பூஜித்தால் அவரை தரிசிப்பது சுலபம், நீ ஒரு புஷ்பவனத்தை ஏற்படுத்தி, பூஜைக்கு வெண்டிய புஷ்பங்களை கொடுக்கவேண்டு மென்றார் அப்போது ரங்கதாஸன் புஷ்பவனம் வைத்து ஒரு கிணற்றையும் நிர்மித்தார் அந்த புஷ்பவனத்திலிருந்து புஷ்பங்களை பகவானுக்கு சமர்ப்பித்து வந்தார். கோடை காலத்தில் கந்தர்வராஜனும் அவன் மனைவியும் புஷ்கரணி யில் ஜலக்கிரீடை யாடிக்கொண் டிருந்தார். ரங்கதாசன் அஜ்ஜலக்கிரீடையைப் பார்த்துக் கொண்டு, பூஜை சமயத் திற்கு ஸ்ரீனிவாசனுக்கு புஷ்பங்கள் கொண்டுவரவில்லை, வைகானஸ ரிஷி புஷ்பங்களுக்காக ரங்கதாசன் வரவை எதிர்பார்த்து வந்தார். ஆனல் ரங்கதாஸன் அவர்களுடைய ஜலக்கிரீடையைப் பார்த்துக்கொண்டிருந்ததால் புஷ்பங்கள் கொண்டுவர தாமதமாயிற்று, பிறகு ரங்கதாஸன் புஷ்பங் களை எடுத்துக்கொண்டு ஓடோடியும் வந்து வைகானஸ ரிஷியிடம் நடந்ததைச்சொல்லி, தான் ஸ்ரீனிவாசன் பூஜைக்கு தடைசெய்ததற்கு மனோவியாகூலம் கொண்டவராயிருக்க, இதையறிந்த ஸ்ரீனிவாசன் பிரத்தியக்ஷமாய் ரங்கதாசனைப் பார்த்து நீ கந்தர்வர்களைப் பார்த்து என் மாயைய்யால் மோகம்கொண்டாய், உன் மனோநிடம் நானறிவேன்; நீ இந்த சரீரத்தைவிட்டு நாராயணபுரத்தை பரிபாலித்து வரும் சுதர்மனின் குமாரனாய் பிறந்து தொண்டமானன்

என்ற பெயருடன் தொண்ட ராஜ்ஜியத்தை பரிபாலிக்கும்படி கூறினர். அந்த ரங்கநாசனே நீ! பூர்வஜன்மத்தில் புஷ்ப வனத்தை போஷிப்பதற்கு நீ நிர்மித்ததுதான் இந்த கிணறு! அப்போது நீ புஷ்பங்கள் அர்ப்பித்து தொண்டமானனென்ற அரசனுய்; இப்போது எனக்கு ஆலயம் கட்டி கீர்த்தி பெற்றும்படி சொல்ல; தொண்டமானன் அச்சொற்களைக் கேட்டு ஸ்ரீனிவாசனுக்கு நமஸ்கரித்து உம் மிஷ்டப்படி ஆலயம் கட்டுகிறேனென்று சொல்லி, ஸ்ரீனிவாசனையும் பத்மாவதியையும் அகஸ்தியாஸ்ரமம் சேர்த்தார்.

தொண்டமானன் சேஷாத்ரி சேர்ந்து, ஆலயம்கட்ட தற்கு வேண்டிய சாமக்கிரியங்களை சித்தப்படுத்திக்கொண்டு ஸ்ரீனிவாசன் கட்டளைப்படி ஆனந்தநிலயம், கோபுர பிராகார மண்டபங்கள், சமையல் மண்டபம் யாகசாலைகள், பரிமள கிருஹம், ஆஸ்தான மண்டபங்கள், சேஷாசலத்திலிருந்து மண்டபங்களும், நடுவழியில் கிணறுகளும் நிர்மித்து அகஸ்தியாஸ்ரமம் சேர்ந்து ஸ்ரீனிவாசனுக்கு நமஸ்கரித்து உங்கள் கட்டளைப்படி ஆலயம் நிர்மித்தேன். நீங்கள் அவ்விடத்திற்கு எழுந்தருள வேண்டுமென்று பிரார்த்தித் தான். ஸ்ரீனிவாசன் தொண்டமானனைப் பார்த்து உன் பக்திக்கு மெச்சினேன். நான் கண்டிப்பாய் நீ நிர்மித்த ஆலயத்தில் பிரவேசிப்பேன் என்று சொல்லி, பிரம்மாதி தேவர்களை அழைத்துக்கொண்டு மங்கள வாத்தியங்க ளுடன் அகஸ்தி யாஸ்ரமத்திலிருந்து புறப்பட்டு, சேஷா சலத்தில் தொண்டமானன் நிர்மித்த ஆனந்த நிலயத்தில் நிவாசம் செய்துக்கொண்டு ஆனந்திப்பதால் அவ்விமானத் திற்கு ஆனந்தநிலயம் என்ற பெயர் பிரசித்தியாயிற்று இப்படி ஸ்ரீனிவாசன் ஆனந்தநிலயத்தில் சேர்ந்து பத்மா வதியை தன் வக்ஷஸ்தலத்தில் வைத்துக்கொண்டு சங்க சக்ரங்கள் இல்லாமல் தன் இடது கையை இடதுகால்பக்கம் தொங்கிவிட்டு வலது கையால் தன் பாதங்களைக் காட்டியும் பக்தர்களுக்கு வைகுண்டம தன் பாதாரவிந்தம்என்றும் கிருஹஸ்தர்களுக்கு சம்சாரனென்னும் சாகரம் முழங்காலள வென்றும் கலியுகத்தில் பக்தர்களுக்கு தரிசனம் கொடுப்ப

தாய் சொன்னார். அப்போது பிரம்மதேவன் ஸ்ரீனிவாசனைப் பார்த்து எனக்கு ஒரு கோரிக்கையுள்ளது. அக்கோரிக்கையை நிறைவேற்ற வேண்டுமென்று கேட்டார் ஸ்ரீனிவாசன் அவ்வார்த்தைகளைக் கேட்டு பிரம்மாவைப் பார்த்து நீகோரிய கோரிக்கையை நிறைவேற்றுவேன் என்று சொன்னார். அப்போது பிரம்மதேவன் உன் சன்னதியில் இரண்டு அகண்ட ஜோதிகள் (தீபங்கள்) ஏற்றி வைப்பேன்; அவைகள் லோக கல்யாணத்திற்காக இந்த சன்னதியிலே எறிய வேண்டும்; நீ இந்த தொண்டமானன் நிர்மித்த ஆனந்த நிலயத்தில் கலியுகம் முடியும் வரையில் நிவாசித்து, பக்தர்களுக்கு தரிசனம் கொடுத்து, பக்தர்களின் கோரிக்கைகளை நிறைவேற்றிக் கொண்டு நான் செய்யும் பிரம்மோத்ஸவத்தை அங்கீகரிக்க வேண்டும் இதுவே என் கோரிக்கை என்றார். அதற்கு ஸ்ரீனிவாசன் சம்மதித்தார். (பிரம்மதேவனால் வைக்கப்பட்ட அகண்ட ஜோதிகள் இன்றைக்கும் சுவாமியின் சன்னதியில் பிரகாசித்து வருகின்றன)



# பிரம்மா ஸ்ரீனிவாசனுக்கு பிரம்மோத்ஸவம் செய்வித்தல்

பிரம்மதேவன் பிரம்மோத்ஸவத்திற்கு வேண்டிய வாஹனங்கள், ரதங்கள் நிர்மிக்கும்படி தொண்டமானனிடம் சொன்னார். அப்போது தொண்டமானன் விஸ்வ கர்மாவை வரவழைத்து தங்கமயமான ரதங்கள், நவரத்தினத்தாலான வாஹனங்கள் வஸ்திராபரணங்கள், சாமரங்கள், குடைகள், மகரதோரணங்கள் முதலான சகலமும் சித்தமாக்கினன் இதற்குள் பிரம்மதேவன் ஸ்ரீனிவாசனைப் பார்த்து சகலமும் சித்தமாயிருக்கிறது, உங்களுடைய அனுமதி பெற்று பிரம்மோத்ஸவம் ஆரம்பிக்க நினைத்திருக்கிறேன் என்று சொல்ல, அவ்வார்த்தைகளைக் கேட்ட ஸ்ரீனிவாசன் பிரம்மதேவனைப் பார்த்து, நான்கு வேதங்களுக்குச் சமானமான நான்கு மூர்த்திகளை நிர்மித்து, நான்கு மூர்த்திகளில் முதலாவது உத்ஸவமூர்த்தி, இரண்டாவது உக்ர ஸ்ரீனிவாசமூர்தது, மூன்றாவது ஸர்வாதிப ஸ்ரீனிவாச மூர்த்தி நான்காவது போக ஸ்ரீனிவாசமூர்த்தியாகவும் நிர்மாணம் செய்; இந்த நான்கு மூர்த்திகளுக்கும் நான் மூல மூர்த்தியாக யிருப்பேன் இந்த பிரம்மோத்ஸவம் புரட்டாசி மாத சுக்லபக்ஷக்ஷத்தில் ஆரம்பித்து பத்துநாட்களில் பூர்த்தியாகும்படி உத்ஸவம் செய்யென்று சொன்னார். அப்போது பிரம்மதேவன் நான்கு மூர்த்திகளை நிர்மித்து நான்கு மூர்த்திகளுக்கும் நான்கு பெயர்கள் வைத்து ஸ்ரீனிவாசனிஷ்டப்படி பிரம்மோத்ஸவம் ஆரம்பிததார்.



# உத்ஸவ விவரம்

| நாள் | பகல் உத்ஸவங்கள் | இரவு உத்ஸவங்கள் |
|---|---|---|
| 1 | | அங்குலர்ர்பணே சேஞதிபதி உத்ஸவம் |
| 2 | வஜ்ரகவுச ஆபரணங்களுடன் திருச்சி துவஜா ரோஹணம் | தங்க பெரிய சேஷவாஹனம் |
| 3 | வெள்ளி சிறிய சேஷவாஹனம் | தங்க அன்னவாஹனம் |
| 4 | சிம்மவாஹனம் | முத்தப்பந்தல் |
| 5 | கற்பக விருக்ஷம் | ஸர்வபூபாலவாஹனம் |
| 6 | பல்லக்குசேவை மோஹினி அவதாரம் | லக்ஷ்மீஹார மகரகண்டியுடன் கருடசேவை |
| 7 | ஹனுமந்தவாஹனம் வஸந்தோத்ஸவம் | யானேவாஹனம் |
| 8 | சூரியபிரபை வாஹனம் | சந்திரபிரபை வாஹனம் |
| 9 | இரதோத்ஸவம் | குதிரைவாஹனம் |
| 10 | பல்லக்குஉத்ஸவம் தீர்த்தவாரி சக்ரஸ்நானம் | அவரோஹணேத்ஸவம் (திருச்சியில்) |

இவ்விதமாக பகலும் இரவும் மஹாவைபவங்களுடன் பிரம்மோத்ஸவம் நடத்திவர, ஸ்ரீனிவாசன் பரமானந்தத்துடன் பக்தர்களுக்கு தரிசனம்கொடுத்து, கோடி சூரிய பிரகாசத்துடன் பிரதி வாஹனத்தின்மீதும் வீற்றிருந்து திருவீதியில்வர பக்தர்கள் நவரத்தின ஆரதிகள் கொடுத்து கற்பூர ஆரதியெடுத்து, மஹா வைபவத்துடன் எழுந்தருளி வரும் ஸ்ரீனிவாசன்மேல் தேவர்கள் புஷ்பமாரி பொழிய இந்த உத்ஸவத்தை பார்க்க தேச தேசங்களிலிருந்து பிரம்ம க்ஷத்ரிய, வைஸ்ய, சூத்திரர்கள் ஆயிரக் கணக்கில் வந்து கண்குளிர சேவித்து பகவானுடன் திருவீதிகளில் கோவிந்த நாமஸ்மரணை செய்துக்கொண்டு ஊர்வலம்வர, இப்படியாக மஹா வைபவங்களுடன் உத்ஸவத்தைப் பார்த்து அவரவர்களுடையசக்திக்கு தகுந்தபடி பகவானுக்கு காணிக்கைகள் செலுத்தி அவர்களுடைய நிவாசத்திற்கு சென்றனர். பிரம்மதேவன் உத்ஸவத்தை பூர்த்தி செய்துக்கொண்டு, ஸ்ரீனிவாசன் அனுமதிபெற்று ஸரஸ்வதியுடன் ஸத்தியலோகம் போய்ச் சேர்ந்தார். சங்கரன் ஸ்ரீனிவாசனின் அனுமதி பெற்று பார்வதி சமேதராய் கைலாசம் சென்றார். இப்படியாக இந்திரன் முதலான தேவர்கள், அநேக விதங்களில் பகவானை தியானித்து அவரவர்களுடைய [illegible] போய்ச் சேர்ந்தனர். தொண்டமானன் [illegible] தண்டப்பிரணாமங்கள் செய்து, சுவாமி எனக்கு வேறொரு ஆசையும் கிடையாது என்னை உன் தாசனாய் ஏற்றுக்கொள் நான் அவ்விடமே உன் சேவை செய்து காலங்களிப்பேனென்று சொன்னான். பகவான் தொண்டமானனும் கோரிக்கைகளை ஏற்று அப்படியே நிறைவேறென்று கூறி, ஆனாலும் உன்னால் சில மகத்தான காரியங்கள் நடக்க வேண்டும் ஆதலால் நீ சிலகாலம் ராஜ்யபரிபாலனம் செய்து பிறகு உன் மனோபீஷ்டத்தை நிறைவேற்றிக் கொள்வாயாக வென்று சொல்லி தொண்டமானனை ஆசீர்வதித்து தன் ராஜ்யத்திற்கு போகும்படி உத்திரவு கொடுத்தார். தொண்டமானன் ஸ்ரீனிவாசனுடைய அனுமதிபெற்று தன் ராஜ்ஜியம் சேர்ந்து ராஜ்யபரிபாலனம் செய்து வந்தான்.

# கூர்மன் என்ற பிராம்மணர் சரித்திரம், ஸ்ரீனிவாசன் சிலையாக மாறுதல்

தொண்டமானன் ராஜ்ய பரிபாலனம் செய்யும்போது கூர்மன் என்ற பிராம்மணர் கார்த்திகை மாதத்தில் தன் தந்தையின் அஸ்திகளை எடுத்துக்கொண்டு, தன் மனைவியையும், ஐந்து வயது குமாரனையும் அழைத்துக்கொண்டு கங்காஸ்நானத்திற்கு போகும்போது வழியில் அவர் மனைவி கர்பவதியானாள்; அவர் குமாரன் சிறியவனானதால் நடக்கமுடியாமல் கஷ்டப்பட்டு நடந்து சென்றுக் கொண்டிருந்தனர் நடுவழியில் தொண்டராஜ்யம் சேர்ந்து. அந்த பட்டணத்தில் தொண்டமானனின் குணாதிசயங்களை தெரிந்துக்கொண்டு அவர் உதவியைப் பெற, இராஜனுடைய சபையை யடைந்து அவரை ஆசீர்வதித்தான் தொண்டமானன் பிராம்மணனுக்கு நமஸ்கரித்து தக்க மரியாதைகளுடன் விசாரித்து, தாங்கள் இவ்விடம் வந்த காரணம் என்னவென்று வினவினான் அதற்கு அந்த பிராம்மணர் என் தந்தையின் அஸ்திகளை எடுத்துக்கொண்டு கங்காஸ்நானத்திற்கு போய்க்கொண்டிருக்கிறேன் நடுவழியில் என் மனைவி கர்பவதியானாள்; என் குமாரன் ஐந்து வயதுடையவன் நடக்க கஷ்டப்படுகிறான்; அவர்களை சில நாட்கள் தங்களிடம் விட்டு போகலாமென்று எண்ணி உங்களிடம் வந்தேனென்றார். அதற்கு இராஜன் உங்கள் இஷ்டப்படி அவர்களை சிலகாலம் என் ஆதீனத்தில் வைத்து போஷிக்கிறேனென்று சொல்லி, பிராம்மணருக்கு கொஞ்சம் திரவ்வியம் கொடுத்து கங்கா ஸ்நானத்திற்கு அனுப்பி, அவருடைய மனைவியும் புத்திரனையும் ஓர் தனி மாளிகையில் இருக்கச் செய்து அவர்களுக்கு வேண்டிய சாமக்கிரியங்களை அவ்விடம் வைத்து, அவர்களை அவ்விடம் வசிக்க ஏற்பாடு செய்து, மற்றவர்கள் அவ்விடத்திற்கு சென்று அவர்களுக்கு எவ்விதமான கஷ்டங்களும் உண்டாக்காதபடி யிருக்க அம் மாளிகையை பூட்டுபோட்டு வைத்தார். அந்த கிருகத்தில் பிராம்மணர் மனைவியும் மகனும் சௌக்கியமாக காலங்

கழித்து வந்தனர்; அவர்களுக்கு எவ்விதமான கஷ்டமும் ஏற்படவில்லைஇப்படிஅவர்கள்சிலக்காலம்அந்தமாளிகையில் வசித்து வந்தனர். இராஜனும் அவர்களை மறந்து, ராஜ்ய பரிபாலனம் செய்துவந்தார். அந்த மாளிகையில் பிராம்மண ருடைய மனைவியும் மகனும் இராஜன்கொடுத்த சாமக்ரி யங்களை யெல்லாம் புசித்துவிட்டனர்; இவர்களுக்கு மேற்கொண்டு உணவில்லாமலும் வெளியே வரமுடியாமலும் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தனர் இராஜனும் இவர்களை அறவேமறந்தான். பிராம்மணருடைய மகனும் மனைவியும் சில காலம் பசிப்பிணியால் கஷ்டப்படு கடைசியில் பிராம் மணருக்கு அவ்விடம் பிறந்த பெண் குழந்தையுடன் மூவரும் மரணமடைந்தனர். சில நாட்கள் சென்ற பிறகு பிராம்மணர் கங்கா ஸ்நானம் செய்து தன் தந்தையின் அஸ்திகளை கங்கையில் விட்டு, கங்கா தீர்த்தத்தை எடுத்துக் கொண்டு மனைவியையும் பார்க்க வேண்டுமென்று ஆவ லுடன் தொண்டமானனுடைய சபையை யடைந்து, கங்கா ஜலத்தை இராஜ சபையில் வைத்து தொண்டமானனை அநேகவிதங்களில் கொண்டாடினர். ஆனல் அந்த பிராம் மணனை பார்த்தது முதல் தொண்டமானன் மனதில் பல விதமாக கலவரமுற்று, ஒன்றும் சொல்லத் தோன்றுதவ ராய். இறுதியில் தைரியத்துடன் பிராம்மணனைப் பார்த்து நீங்கள் போய் ஸ்நானம்செய்து வாருங்களென்று சொல்லி பிராம்மணனை ஸ்நானத்திற்கு அனுப்பி, தன் குமாரனை அழைத்து பிராம்மணரின் மனைவி மக்களின் க்ஷேமங்களை விசாரித்து வரும்படி அனுப்பினன். ராஜகுமாரன் அந்த மாளிகையை திறந்து பார்க்க, அம்மாளிகையில் பிராம்மணரின் மனைவி மக்களின் சவங்களைக் கண்டு, பிராம்மணனல் என்ன சாபமுண்டா குமோ வென்று பயமுற்றவனுய் தன் தந்தையினிடம் சென்று அவ்விடம் நடந்துள்ள விருத்தாந்தத்தை அவருக்கு தெரியப் படுத்தினன். அதைக்கேட்ட தொண்டமானன் பலவிதமாக யோசித்து ஒன்றும் செய்யத்தோன்றுதவனு யிருக்கும்போது

ஸ்நானத்திற்கு சென்ற பிராம்மணர் ஸ்நானம்செய்துவிட்டு இராஜனிடம் வந்து சேர்ந்தான், தொண்டமானன் அப் பிராம்மணனைப் பார்த்து உமக்கு வேண்டிய சாமக்ரி யங்களைப் பெற்று நீரே சமைத்து போஜனம் செய்யுங்க ளென்று சொன்னார். அப்போது பிராம்மணன் இராஜனைப் பார்த்து அரசே! என் மனைவி மக்களைகாண ஆவலுடன் வந்துள்ளேன், அவர்களைப் பார்த்த பிறகு நானே சொந்தமாய் சமைத்து சாப்பிடுகிறேனென்று சொன்னார். அவ்வார்த்தைகளைக் கேட்டு அரசன் பிராம்மணனைப் பார்த்து, உன் மனைவி மக்களை சில நாட்களுக்கு முன் பார்த்தேன் அவர்கள் அந்தப்புர ஸ்திரீகளுடன் சேஷா சலத்திற்கு ஸ்ரீனிவாசனை தரிசிக்க போயிருக்கின்றனர் அவர்கள் நாளை அல்லது மறுதினம் வந்துவிடுவார்கள்; நீங்கள் சமைத்து சாப்பிடுங்களென்று சொல்லி, பிராம்மண னுக்கு வேண்டிய சாமக்கிரியங்களைக் கொடுத்தனுப்பினான். பிறகு தொண்டமானன் மிகவும் பயமுற்றவனாய் என்ன செய்வதென்று யோசித்து, தன் தனயனைப் பார்த்து நாமிருவரும் இன்றிரவு சேஷாசலம் சென்று ஸ்ரீனிவாசனை தரிசித்து வருவோமென்று சொல்லி தன் குமாரனையும் அழைத்துக்கொண்டு சேஷாசலம் சேர்ந்து, ஸ்ரீனிவாசன் பாதங்களில் வீழ்ந்து பிரார்த்தனர். அப்போது ஸ்ரீனி வாசன் தொண்டமானனைப் பார்த்து இந்த நள்ளிரவில் இவ்விடம் வந்து என் பாதங்களில் வீழ்ந்து இப்படி துக்கிப்ப தற்கு காரணமியாது என்று கேட்டார். ஆனால் இராஜன் மறு வார்த்தை சொல்லாமல் அவர் பாதங்களை விடாமல் புலம்பினான். எவ்வளவு தேற்றினாலும் காரணம் செல்லாம லிருக்க, ஸ்ரீனிவாசன் இராஜனுடைய மனோபாவத்தை தெரிந்துக்கொண்டு, நீ பிரம்மஹத்யாபாதகம் செய்து என்னை அண்டி யிப்படி பரிதவிக்கின்றாய்;எழுந்திரு, பயப்பட வேண்டாமென்று அபயமளித்து, இராஜனைத் தேற்றி அவனைப் பார்த்து நீ பிரம்மஹத்யா பாபமடைந்திருக்கிறாய் நான் என்ன செய்வேன்; நான் பாபாத்மா, துராசாரன் நித்யதுக்கமுற்றவன்; நான் அகால மரணமடைந்தாலும் அடைவேன் ஆனால் என் பக்தர்களுக்கு துன்பமேற்பட்டால்

நான் சகிக்கமாட்டேன்; எனக்கு உன்மேலுள்ள பிரியத்தாலும், உன் சகோதரன் எனக்கு செய்த உதவிக்காகவும் நான் இந்த பிராம்மணர்களை பிழைக்கச் செய்கிறேன்! எனக்கு கலியுகத்தில், மஹாபாவியான தொண்டமானனுக்கு பாபபரிஹாரம் செய்வித்தால் கீர்த்தியுண்டாகுமென்று சொல்லி, தொண்டமானனைப் பார்த்து அந்த பிராம்மனர்களின் சவங்களை இவ்விடத்திற்கு கொண்டுவாயென்று கூறினர் உடனே தொண்டமானன் தன் குமாரனை அனுப்பி அந்த சவங்களை தருவித்தான். ஸ்ரீனிவாசன் அந்த சவங்களின்மீது ஹஸ்தி தீர்த்தத்தை தெளித்தார் அவர்கள் உயிர் பெற்றெழுந்து நின்று, ஸ்ரீனிவாசனுடைய மார்ப்பில் பதினான்கு லோகங்கள் சப்த சமுத்திரங்கள், முப்பது முக்கோடி தேவர்களையும் பார்த்து சாஷ்டாங் தண்டம் சமர்பித்து நிற்க, அவர்களை பகவான் ஆசீர்வதித்து, தொண்டமானனைப் பார்த்து இவர்களை அழைத்துச் சென்று இவர் கணவரிடம் சேர்த்துவிடு யென்று சொல்லி, இக்கலியுகத்தில் என் பக்தர்கள் தெரிந்தும் தெரியாமலும் இப்படிப்பட்ட பாபங்கள் செய்து ஒன்றும் செய்யத்தோன்றாதவராய் கடைசியில் என்னை அணுகுவார்கள்; நான் அவர்களை காப்பாற்றுவிடில் என்னை அவர்கள் கடுமையாய் நிந்திப்பார்கள்; நான் இக்கலியுகத்தில் மௌனம் வகிப்பேன் என் அந்தரங்க பக்தர்களுடன் மாத்திரம் பேசுவேனென்று சொல்லி தொண்டமானன் கட்டிய ஆனந்த நிலயத்தில் சென்று பத்மாவதியை தன் வக்ஷஸ்தலத்தில் வைத்துக் கொண்டு சதுர்புஜங்களுடன் சங்கு சக்ர மில்லாதவராய் ஆனந்தநிலயத்தில் மௌனமாய் நின்றார் அப்போது தொண்டமானன் ஸ்ரீனிவாசனை அநேகவிதங்களில் பிரார்த்தித்து பிராம்மனனுடைய மனைவி மக்களை அழைத்துக் கொண்டு தொண்ட ராஜ்யத்தை யடைந்து பிராம்மணனைப் பார்த்து நமஸ்கரித்து அவருடையமனைவி மக்களை அவருக்கு ஒப்படைத்தார் பிராம்மணன் தன்னுடைய மனைவி மக்களைப் பார்த்து மிக்க ஆனந்த முற்றவராய் மனைவியைப் பார்த்து நீ சேஷாசலத்தில் ஸ்ரீனிவாசனை தரிசித்ததை கேள்வியுற்று ஆனந்தமடைந்தேனென்று சொல்ல, அதைக்

கேட்டு அவர் மனைவி தொண்டமான ராஜனால் என் ஜன்மம் சாபல்யமாயிற்று ஸ்ரீனிவாசன் வக்ஷஸ்தலத்தில் முப்பது முக்கோடி தேவர்களையும் பதினான்கு லோகங்களையும் ஸப்த சமுத்திரங்களையும் சூரிய சந்திரர்களையும் நதிகள் நிதிகள் முதலியவைகளையும் பார்த்து என் ஜன்மம் சாபல்யமாயிற்று ஆனால் இத் தொண்டமானனுக்கு நம்மால் மிக்க துக்க முண்டாயிற்று, இம் மஹானுடைய மகிமையை தெரிவிக்க வெகு காலமாகும். நாம் தொண்டமானனின் அனுமதி பெற்று நம் இருப்பிடம் செல்வோம்,- அவ்விடம் இந்த விருத்தாந்தத்தை நிதானமாய் தங்களுக்கு தெரிவிக்கிறே னென்று சொல்லி, அந்த பிராம்மண தம்பதிகள் தொண்ட மானனை அநேகவிதங்களில் கொண்டாடி அவருடைய அனுமதி பெற்று புத்திரனையும் புத்திரியையும் அழைத்துக் கொண்டு, தங்களிருப்பிடத்திற்கு போய்ச் சேர்ந்தனர்.

## தொண்டமானன் சேஷாத்ரி சேர்ந்து ஸ்ரீனிவாசனைப் பூஜித்தல்

தொண்டமானன் தன் குமாரனை அழைத்து நான் இனி ஸ்ரீனிவாசனுடைய சேவை செய்ய நிச்சயித்துக்கொண் டேன் ஆதலால் நீ இந்த ராஜ்யத்தை பரிபாலிக்கவேண்டும் என்று சொல்லி, தொண்டமண்டலத்தை தன் குமாரனுக்கு பட்டாபிஷேகம் செய்து, தன் மனைவியைப் பார்த்து நீ இனி சதா ஸ்ரீனிவாசனை தியானித்து காலங்கழிக்கவேண்டும்; நான் சிலகாலம் ஸ்ரீனிவாசனின் பாதசேவை செய்ய வேண்டுமென்று நிச்சயித்துள்ளேன் என்று சொல்லி, தொண்டராஜ்யத்தை விட்டு சேஷாசலம் சேர்ந்து பகவா னுக்கு துளசி அர்ச்சனை செய்து, ஸஹஸ்ரநாமங்கள் பாடி அநேக விதங்களில் பிரார்த்தித்தார். ஆனால் ஸ்ரீனிவாசன் ஒன்றும் பேசாமலிருந்தார். பகவான் பேசாததால் தொண்டமானன் மிக்க துக்கத்துடனும் கோபத்துடனும் ஸ்ரீனிவாசனை நிந்தித்தார். அதற்கு ஸ்ரீனிவாசன் மௌனமா யிருக்க, இனி என்ன செய்வேனென்று யோசித்து அன்ன

அகாரமில்லாமல் சதா பகவானை தியானித்து, துளசியால் பகவானை பூஜித்துக் கொண்டிருந்தார். இப்படியாக சில காலம் கடந்தபிறகும் பகவான் பேசாமலிருந்தார். இப்படி பிரதி தினமும் பகவானுக்கு துளசி அர்ச்சனை செய்துக் கொண்டு தியானித்து வந்தான். சில நாட்கள் கழிந்த பிறகு பீபன் என்ற குயவன் பிரதிதினமும் தன் கிருஹ கிருத்யங்களை நிறைவேற்றுக்கொண்டு, சுரங்கமார்க்கமாய் சேஷாசலம் சேர்ந்து மண்ணால் செய்த புஷ்பங்களால் ஸ்ரீனிவாசனை பூஜித்து வந்தான் இப்படி பூஜிக்கப்பட்ட மண் புஷ்பங்கள் ஸ்ரீனிவாசனின் பாதங்களின் மேல் இருப்பதும் தொண்டமானன் அர்ச்சித்த துளசீதளங்கள் சுவாமியின் பாதத்திற்கு தூரமாய் இருப்பதையும் பார்த்து ஸ்ரீனிவாசன் தன் மேல் மிகவும் கோபமுற்றிருப்பதாய் நினைத்து தொண்டமானன் அது முதல் அன்னபானங்களுடன் தான் செய்துவந்த பூஜைகளையும் விட்டு ஸ்ரீனிவாசன் பாதாரவிந்தங்களை தன் இரண்டு கர்களாலும் பிடித்துக்கொண்டு விடாமல் சதா தியானித்து வந்தான். இப்படியாக சில நாட்கள் கடந்த பிறகு ஸ்ரீனிவாசன் அசரீரியாய், தொண்டமானனே! நீ செய்த உபகாரத்திர்க்கு பிரத்தியுபகாரம் உனக்கு செய்தேன் நீ ஏனிப்படி என்னை மன்றாடுகிறாய், நீ உன் ராஜ்யத்திற்கு போய் சுகமாய் காலங் கழித்துவாயென்று சொல்ல; அவ்வார்த்தைகளைக் கேட்ட தொண்டமானன சுவாமீ! உங்கள் சொற்படி எனக்கு ஒன்றும் குறைவில்லை, நான் அனுபவிக்கும் ராஜ்யபாரம் மனைவி மக்கள், தனகனக வஸ்துவாஹனங்கள் எல்லாம் சாஸ்வத மற்றவையென்று உன் தரிசனத்தால் தெரிந்துக் கொண்டேன். அப்படிப்பட்ட போகபாக்கியங்களில் இச்சையில்லை, என் மனம் உன்னிடமே லீனமாயிற்று. என்னை ஆட்கொண்டருள வேண்டும், என் பூஜைகளிலும் நீ வெறுப்புற்று மண் புஷ்பங்களை ஏற்றுக்கொள்கிறாய், நான் உன்னை நம்பிய பக்தன் என்னைவிட உனக்கு பக்தர்கள் யார் இருக்கின்றனர், நான் அநேகஜன்மங்களில் உன்னை ஆராதித்து உனக்கு ஆலயம் கட்டி, உன் அனுக்கிரஹம் பெற்றவன்; என்னைவிட உனக்கு வேறே பக்தர்

களில்லை யல்லவா யென்று சொன்னான் அவ்வார்த்தை களைக் கேட்டு ஸ்ரீனிவாசன் ஆம் உன்னைவிட எனக்கு பக்தர்களில்லை; நம்பிவந்த அதிதிகளை அனாதைகளாக்கி கடைச்சியில அவர்களுக்கு எமனைப்போலான பக்தர்களில் • முதலானவன் நீ நான் அநேக காலமாக என் பக்தர்களுடன் ஸரஸ ஸல்லாபங்கள் செய்து அவர்களை திருப்தி செய்து வந்தேன், அப்படிப்பட்ட பக்தர்களுக்கு என் சொற்களையே கேட்காமல் செய்த பரம பக்தர்களில் முதலானவனும் நீயே! இப்படி அநேக காரியங்களில் உன்னால் என் காரியங்களுக்கு தடைசெய்த பக்தர்களிலும் நீயே முதலானவனென்று சொல்லும்போது தொண்டமானன் கேட்டு மிகவும் துக்கத் துடன் அழுதுக் கொண்டு பரிதவித்துக் கொண்டிருக்கும் தொண்டமானனைப் பார்த்து இரக்கங் கொண்டவராய் பகவான் இப்படி சொல்லலுற்றார். நீ இப்படி துக்கமடைந் தால் பிரயோஜனமில்லை, இவ்விடத்திற்கு ஒரு யோஜனை தூரத்தில் குலாலன் என்ற பீமன் என் பரமபக்தன்; அவன் மனைவி தமாலினி அவளும் என் பக்தர்களில் ஒருவள் நீ அவர்களை தரிசித்தால் அந்த பக்தர்கள் எப்படிப்பட்ட வர்களோ தெரிந்துக் கொள்வாய் என்று சொன்னார்.

## குயவனுக்கு மோக்ஷம் கொடுத்தல்

ஸ்ரீனிவாசனுடைய சொற்களை கேட்டு தொண்ட மானன் அவருடைய பாதங்களை விட்டு, குலாலன் என்ற பீமன் வசித்துவந்த பீமவரம் சேர்ந்து, இவ்விடம் பீமன் என்ற பக்தன் இருக்கிறார்; அவருடைய வீடு எவ்விட மிருக்கிறதென்று உரக்கக் கூவிக் கொண்டு அவருடைய வீட்டின் திண்ணையின்மேல் வந்து விழுந்து சாஷ்டாங்கமாய் நமஸ்கரித்து மூர்ச்சையடைந்தான். அப்போது பீமன் தொண்டமானனைப் பார்த்து, இதென்ன! தொணட மானன் இப்படி பரிதவித்துக் கொண்டு நம் வீடுத் திண்ணை யில் விழுந்து மூர்ச்சையடைந்து விட்டாரென்று சொல்லி ஓடோடியும் வந்து தொண்டமானனை அநேகவிதங்களில் தேற்றும்போது அவர் மனைவி தமாலினி மண் பாத்திரத்தில்

ஜலம் கொண்டுவந்து தொண்டமானனின் முகத்தின் மேலிருக்கும் வியர்வையை துடைத்து அந்த தம்பதிகள் தொண்டமானனுக்கு பரம உபசாரங்கள் செய்துவர, அவ்விருவர்களுடைய மத்தியில் ஸ்ரீனிவாசன் பிரத்தியக்ஷமானார் அப்போது பீமனும் தமாலினியும் பகவானின் பாதங்களின் மேல் வீழ்ந்து அநேகவிதங்களில் பிரார்த்தித்தனர். இதற்குள் தொண்டமானன் மூர்ச்சை தெளிந்து எதிரிலுள்ள பகவானையும் அக்குலால தம்பதிகளையும் பார்த்து, கைகூப்பி ஸ்ரீனிவாசனை தியானித்து நின்றான். அப்போது தமாலினி ஸ்ரீனிவாசனைப் பார்த்து சுவாமி நாங்கள் பரம ஏழை: உம்மை ஆதரித்து விதுரனைப்போல் விருந்து செய்ய இயலாதவர்கள்; சபரியைப் போதல் பழங்களை சமர்ப்பிக்கவும் இயலாதவர்கள்; குசேலனைப்போல் அவலை புசிக்கச் செய்யும் இயலாதவர்கள்; உங்களை தியானிக்க எங்களுக்கு மந்திரங்கள் தெரியாது; யாக யக்ஞங்களை செய்யும் மியலாதவர்கள் எங்களை உன் தாசர்களுக்கும் தாசர்களாய் ஏற்றுக்கொள், நான் சமையில் செய்துள்ள பதார்த்தங்களை புசிக்கும்படி சொல்லி, வெண்ணீர்கொண்டு வந்து பகவானின் பாதங்களை பூஜித்து அந்த ஜலத்தை மஹா பிரசாதமென்று தலையில் தெளித்துக் கொண்டு, தீர்த்தம் பெற்றுக்கொண்டு வெண்மையான வஸ்திரத்தால் ஸ்ரீனிவாசனின் பாதங்களை ஒத்தி, பகவானை மண்ணால் செய்யப்பட்ட மணையின்மேல் உட்காரவைத்து தான் சமைத்த பதார்த்தத்தை பக்தியுடன் பரிமாறினாள். அப்போது பகவான் அதை புசித்து வரும்போது தேவலோகத்திலிருந்து விமானம்வந்து. ஸ்ரீனிவாசன் கருடனை அழைத்து பத்மாவதியை தன்னிடம் சேர்பிக்கும்படி சொன்னார். கருடன் அவர் அனுமதி பெற்று பத்மாவதியை அழைத்துவந்து ஸ்ரீனிவாசனிடம் சேர்ந்தான். ஸ்ரீனிவாசன் பத்மாவதி சமேதராய் அந்த குலால தம்பதிகளுக்கு தரிசனம் தந்து தன் சங்குசக்ரங்களை பீமனுக்கு கொடுத்து, தொண்டமானன் பார்த்துக் கொண்டிருக்கும்போது அந்த குலால தம்பதிகள் விமானமேறி சுவர்க்கலோகம மடைந்தனர்.

## தொண்டமானனுக்கு வரம் கொடுத்தல்

வைகுண்டாத்ரிக்கு சென்ற குலால தம்பதிகளை தொண்டமானன் பார்த்து வெட்கமடைந்தவனாய் பகவானின் பாதங்களின் மேல் விழுந்து என் கர்வத்தை விட்டு விட்டேன், என்னைக் காட்டிலும் பக்தன் இல்லை யென்று கர்வமடைந்ததற்கு நான் மகா கஷ்டங்களுக் குள்ளானேன் என்னை மன்னித்து உன் தாசனாய் ஏற்றுக் கொள்ளென்று அநேகவிதங்களில் பிரார்தித்தான். கருணா மூர்த்தியான ஸ்ரீனிவாசன் தொண்டமானனை மன்னித்து குலால பம்பதிகளுக்கு கொடுத்த விதமாய் தொண்டமான னுக்கு மோக்ஷம் தந்து எப்போதும்போல் சேஷாசலம் சேர்ந்து, ஆனந்தநிலயத்தில் பிரவேசித்து பக்தர்களுக்கு தரிசனம் கொடுத்துக்கொண்டு சந்தோஷமாய் பல யுகங்கள் கடந்தன.

## ஸ்ரீனிவாசன் லக்ஷ்மியைவிட்டு பிரிந்ததை பத்மாவதியிடம் கூறுதல்

ஸ்ரீனிவாசன் மனதில் லக்ஷ்மியை விட்டுப் பிரிந்தவிஷயம் அவ்வப்போது நினைத்து வருந்தலானார். ஆனால ஸ்ரீனி வாசன் தன் மனதை மறைத்து வந்தார் இப்படி சில காலம் கடந்தது. குபேரனிடம் பெற்ற கடனுக்கு வட்டி சேலுத்தவேண்டிய காரணத்தால் தன்னிடம் லக்ஷ்மி யில்லாததால் தனக்கு திரவ்வியம் எப்படி கிடைக்குமென்று யோசிதது எப்படியாகிலும லக்ஷ்மியைப் பிரார்த்தித்து தன் வக்ஷஸ்தலத்தில் வைத்துக்கொள்ள வேண்டுமென்றும், குபேரனின் கடனைத் தீர்க்கயோசித்துக்கொண்டும் மௌன மாக யிருந்தார். இப்படியிருக்குய் ஸ்ரீனிவாசனின் மனதை தெரிந்துக்கொண்டு பத்மாவதி ஒரு நாள் ஏகாந்தமாய் இருக்கும்போது ஸ்ரீனிவாசனின் பாதங்களில் வீழ்ந்து அநேகவிதங்களில் பிரார்தித்து பாதங்களை விடாமல்

பிடித்துக் கொண்டு என்மேல் தமக்குள்ள பிரேமாதி சயங்களை கொண்டாடி சதா தங்களை தியானித்துக்கொண்டு தங்களுக்கு வேண்டிய பணிவிடை செய்துக்கொண்டும் ஆனந்தமுற்றவளாயிருக்க, தாங்கள் இப்படி மௌனமாயிருக்க காரணமென்ன வென்று வினவி, பாதங்களை விடாமலிருந்தனள். அப்போது ஸ்ரீனிவாசன் தன் இரண்டு கரங்களாலும் பத்மாவதியை எழுந்திருக்கச் செய்து ஆலிங்கனம் செய்துக்கெண்டு பத்மாவதியைப் பார்த்து, பிரளயகாலத்தில் நான் தனிமையாய் ஆகாரமில்லாமல் நிர்குண பிரம்மமானேன், அப்போது லக்ஷ்மி என்னை விடாமல் மாயா விதானமாய், சித்ருபத்திலுள்ள லக்ஷ்மி சுயரூபமுற்று என்னை அடைவாள் நான் அப்போது ஆனந்தமுற்றவனுவதால் மஹாதத்வாதி தத்வங்களை ப்பெற்று, அவற்றின் அனுக்கிரஹத்தால் சிருஷ்டி வரிசையாய் சர்வ பிரபஞ்சமாக்கிக் கொண்டிருக்கும், அப் பிரபஞ்சத்திற்கு கர்த்தாவாய், எனக்கு இஷ்டமாகும்போது பிரமமாதி தேவர்களை சுருஷ்டிப்பேன் ஒருபோது இப் பிரபஞ்சங்கள் என்னுள் அடங்கிஇருக்கும் இக் காரியங்கள் யாவும் எனக்கு அம் மஹா லக்ஷ்மியால் உண்டாகும் அப்படிப்பட்ட சிருஷ்டி ஸ்திதி ஸமயத்தில் என்னை ஒரு சுந்தராங்கனுக்கி தானொரு உலக சுந்தரியாய் குருதரமான கல்யாண குணங்களை எனக்கு உண்டாக் சந்திரனில் வசிக்குகும் சகோரங்களைப் போல் சர்வ காலங்களிலும் என் வக்ஷஸ்தலத்தில் வசித்து வரும் சமயத்தில் பிருகு ரிஷி தன் பாதங்களால் லக்ஷ்மி நிவாசஸ்தானமான என் வக்ஷஸ்தலத்தில் உதைத்தார். அப்போது லக்ஷ்மி யன்மேல் கோவமுற்று, என்னைத் தூற்றி என்னைவிட்டு கரவீரபுரம் போய்ச்சேர்ந்தனள். லக்ஷமி என்னைவிட்டு சென்றதால் என்னுள் ஸர்வஸ்வமும் அந்த லக்ஷ்மியின் பின் சென்றன. பிறகு நான் வைகுண்டத்தை விட்டு இப் பர்வதத்தில் திந்திரிணீ விருக்ஷத்தின்கீழ் ஒரு புற்றினுள் வசித்துவந்தேன் எனக்கு சர்வக்ஞதை இல்லாததால் நிஷ்காரணமாய் கோடலியால் அடிப்பட்டேன். எனக்கு மனைவி யில்லாததால் வனத்தில் உன்னைப்பார்த்து என்னை விவாஹம் செய்துக் கொள்ளும்படி கோரியதால்

உன் தோழிகளால் கற்களினுள் அடிக்கவைத்தனே; லக்ஷ்மி இல்லாத காரணத்தால் குபேரனிடம் கடன்வாங்கி உன்னை விவாஹம் செய்துக்கொண்டேன். உன் தந்தை சகோதரர்கள் உன் விவாஹத்தில் எனக்கு கொடுத்த தனத்தால், குபேரனின் கடன் தீராது லக்ஷ்மி என்னைப் பிரிந்ததால் மனைவி துரோகியென்றும், குபேரனின் ருணத்தினுள் ருண பாதை அடைந்தவனுயும் உலகத்தார் என்னைப்பார்கள் என்று எனக்கு ஆலோசனைகள் உண்டானதினுள் இப்படி மௌனமாயிருந்தேன், இதற்கு தகுந்த யோசனையை நீ தெரியப் படுத்தென்று கூறினர். இவ்வார்த்தைகளைக் கேட்ட பத்மாவதி நாதனைப் பார்த்து நமஸ்கரித்து ஸ்வாமீ! இந்த பிரணவத்திற்கு யோசனை கூற நான் தகுந்தவளா? நீங்கள் சர்வக்ஞர் உம் வார்த்தைக்கு பதில் சொல்பவர் இப் பதினுன்கு லோகங்களிலும் எவருமில்லை ஆனாலும் என் பிரார்தனையை ஆதரிக்க வேண்டும், சிருஷ்டிக்கு பூர்வம் உங்களை யடைந்து, உங்களை பெருமைபடுத்திய லக்ஷ்மி தேவியை நீங்கள் எப்படியாகிலும் பிரார்தித்து இவ்விடத்திற்கு அழைத்து வரவேண்டும்; நாங்களிருவரும் இவ்விடம் வசித்து வருவோம், உங்களிருவருக்கும் வேண்டிய பணிவிடைகள் நான் தவராமல் செய்து உங்களை ஆனந்திக்கச் செய்வேன். நீங்கள் இச்சணமே சென்று லக்ஷ்மியை இவ்விடத்திற்கு அழைத்துவரவும் இதுவே என் பிரார்த்தனையென்று மொழிந்தாள். இப்படிச்சொன்ன பத்மாவதியின் வார்த்தைகளைக் கேட்டு ஸ்ரீனிவாசன் பத்மாவதியைப் பார்த்து நான் உன்னை விவாஹம் செய்துக்கொண்டது முதல் நாமிருவரும் தனிமையாய் வசித்து காலங்களித்து வந்தோம், நீ என்மேல் மிக்க ப்ரேமையுடன் பிரகாசித்து வந்தாய் நான் இப்போது அந்த லக்ஷ்மியை வக்ஷஸ்தலத்தில் சர்வ காலமும் நிவாசிக்க செய்தால் உன் மனமெப்படி ஒப்பும் ஆனதால் எனக்கு இஷ்டமில்லையென்று சொல்லிய நாதனைப்பார்த்து பரிதவித்து ப்ராணநாதா அவளால்தான் நான் உங்களை விவாஹம் செய்துக்கொண்டேன்; அவள் அனுக்கிரஹமில்லாவிட்டால் நானெப்படி உங்களை விவாஹம் செய்துக்கொள்ள முடியும்? அவள் எனக்கு

செய்த உபகாரத்திற்கு நான் எத்தனை ஜென்மங்களெடுத்து அவள் சேவையை செய்தாலும் அவள்செய்த உபகாரத்திற்கு பிரத்தி யுபகாரமாகாது நனே அவளுடைய பணிப்பெண்ணு யிருப்பேன். நீங்ள் என்மேல்சம்பூர்ண கடாக்ஷம்வைத்து அவள்வசித்துவரும் இடம் தெரிவித்தால் நான் அவளுக்கு வணங்கி அவளுடைய பாதங்களில்வீழ்ந்து அவளை வேண்டி இவ்விடத்திற்கு அழைத்து வருவேனென்று சொன்னுள். அவ்வார்த்தைகளைக் கேட்டு ஸ்ரீனிவாசன் பத்மாவதியைப் பார்த்து, நான் உன்னுடைய தூய்மையான மனதை அறிவேன், நீ வியசனப்படாதே நீ இந்த வகுளா தேவியுடன் இவ்விடமே வசித்துவரவும், நான் போய் கட்டாயமாய் அந்த லக்ஷ்மியை இவ்விடம் அழைத்து வருகிறேனென்று பத்மாவதியை சமாதானப்படுத்தி, கரவீர புரம் போவதாய் நிச்சயித்துக் கொண்டார். இப்படி ஸ்ரீனி வாசன் புறப்பட்ட செய்தி கரவீரபுரத்திலுள்ள லக்ஷ்மீதேவி தெரிந்துக்கொண்டு, ஸ்ரீனிவாசன் எப்படியாயிலும் சேஷாசலத்திற்கு அழைத்துச் செல்ல எண்ணி இவ்விடத் திற்கு வந்துக்கொண்டிருக்கிறுர். என்னை அவர் சேஷா சலத்திற்க்கு வரும்படி அழைத்தால் நிராகரிக்க முடியாது நான் அவ்விடம் சென்ருல் பத்மாவதிமனம் துன்பமடையும், நானே சம்மதித்து அப் பத்மாவதியை என் நாதனுக்கு விவாஹம் செய்வித்து,நான் தற்சமயம் அவ்விடம் செல்வது தருமமில்லையென்று நினைத்து கரவீரபுரத்திலிருந்து வழி தவராமல் பாதாளலோகம் சேர்ந்து, ஹரிவம்சத்தவரும் விசேஷயோக மகிமைகளால் ஒப்பும் கபில மஹரிஷியினிடம் சேர்ந்தனள். கபில முனிவர் லக்ஷ்மியை வரவேற்று குசலம் விசாரித்து அவளுக்கு தகுந்த ஆசனம் கொடுத்து வீற்றிருக்கச் செய்து அவளை ஆதரித்தார். லக்ஷ்மிதேவி தன் பதியை தியானித்துக் கொண்டு தவம் செய்துவந்தாள்.



## லக்ஷ்மி கொல்லாபுரத்தில் தவம் செய்யும்போது ஸ்ரீனிவாசன் தேடுதல்

ஸ்ரீனிவாசன் பத்மாவதியை வகுளாதேவியினிடம் ஒப்புவித்து, வராஹமூர்த்திக்கு இந்த செய்தியை தெரியப் படுத்தி மறுநாட் காலை தூய்மையான வஸ்திரங்களை அணிந்து கங்கணாபரணலங்கிருதராய் கருடன் மேலேறி லக்ஷ்மியை இவ்விடத்திற்கு அழைத்து வருகிறேனென்று பத்மாவதியிடம் சொல்லி சந்தோஷமாய் புறப்பட்டு கரவீரபுரம் போய்ச் சேர்ந்தார். ஸ்ரீனிவாசன் லக்ஷ்மி வசித்து வந்த ஆலயத்திற்கு சென்று அவ்விடம் பார்க்க, லக்ஷ்மியைக் காணவில்லை; அவ்விடம் லக்ஷ்மியில்லாததால் மனோ வியாகூல முற்றவராய் இப்படியாக யோசிக்கலானார். நான் அப் பத்மாவதியை விவாஹம் செய்துகொண்டு சிலகாலம் அந்த லக்ஷ்மியை மறந்தேனென்று நினைத்து என்மேல் மோகமற்றவளாய் கோபமுற்று இவ்விடத்தினின்று வேறிடத்திற்கு போயிருக்க வேண்டுமென்று யோசித்து ஒன்றும் தோன்றாதவராய் அநேக விதங்களில் துக்கித்து கரவீரபுர அரண்யங்களில் சுற்றி அலைந்து லக்ஷ்மியைக் காணாமல் அப் பர்வதத்தில் போய்ச் சேர்ந்து, அவ்விடம் வசித்துவரும் ரிஷிகளைப்பார்த்து ஓமுனிவர்களே, கருடகந்தருவர்களே, என் ரமாதேவி என்னை ஏமாற்றி இந்த வனத்தில் எவ்விடமோ தவம்செய்து வருகிறாள் நான் இவ்வனத்தை சுற்றி அலைந்து களைப்புற்றிருக்கிறேன் அந்த ரமாதேவி தவம் செய்யுமிடம் உங்களுக்கு தெரிந்திருந்தால் அச்செய்தியை எனக்கு தெரிவியுங்களென்று சொல்லி பரிதவித்துக்கொண் டிருந்தார் இப்படி பரிதவித்துக்கொண்டிருக்கின்ற ஸ்ரீனி வாசனைப் பார்த்து அப்பர்வதத்தில் வசித்துவந்த பக்தர்கள் முனிவர்கள் தவசேரஷ்டர்கள் கந்தருவர் முதலானவர்கள் இப்படி பரிதவிக்கின்ற ஸ்ரீனிவாசனுக்கு நமஸ்கரித்து சுவாமீ! அந்த ரமாதேவியை நாங்கள் பார்க்கவில்லை அந்த தேவியர் இந்த அரண்யத்தில் எவ்விடத்திலுமில்லையென்று கூறினர். அவர்களுடைய சொற்களை கேட்டு ஸ்ரீனிவாசன்

சிந்தனையுற்று கரவீரபுரம் சேர்ந்து அகஸ்தியர் பூஜித்துவந்த லக்ஷ்மி விக்கிரஹத்திற்கு அபிஷேகம் செய்து அவ் விக்கிரஹத்தின் எதிரில் உட்கார்ந்துக் கொண்டு பத்து வருஷம் தவம் செய்தார்.

## அசரீரி ஸ்ரீநிவாசனை தவம்செய்யும்படி கூறுதல்

விசனத்துடன் தவம் செய்துவந்த ஸ்ரீனிவாசனைப் பார்த்து ஆகாயவாணி அற்புதவாக்கினல், ஓ தேவா! இவ்விடம் தவம்செய்துவந்தால் ரமாதேவி உங்களுக்கு பிரத்யக்ஷ மாகமாட்டாள் நீங்கள் இவ்விடத்திற்கு சுமார் நாற்பது யோஜனை தூரத்தில் சுவர்னமுகிநதி யிருக்கிறது. அந்நதியின் வடதிசையில் பத்மஸரோவர முள்ளது. அந்த பத்மஸரோவரத்தில் தேவலோ கத்திலுள்ள ஸஹஸ்ரதள பத்மகமலத்தை எடுத்துவந்து அந்த பத்மஸரோவரத்தில் பிரதிஷ்டித்து அக்கமலத்தின் கிழக்கு திசையினில் சூரியனை பிரதிஷ்டைசெய்து, நீ தவ வேடம்பூண்டு அந்த கமலத்தின்மேல் ஒரே திருஷ்ட்டியுடன் லக்ஷ்மியைக்குறித்து தவம் செய்வீர்களானல் அந்தரமாதேவி அப்பத்மத்தில் பிறந்து உன் வக்ஷஸ்தலத்தை வந்தடை வாள் நீ இப்போது செய்யும் தியானித்தினுள் அந்த லக்ஷ்மி உனக்கு பிரசன்னமாக மாட்டாளென்று கூறிற்று. அவ்வார்த்தைகளைக் கேட்டு ஸ்ரீனிவாசன் கண்களை திறந்து நாற்புறங்களிலும் பார்க்க, யாருமில்லாததால் அவ்வார்த்தைகள் ஆகாயவாணியினுடைய தென்று தெரிந்துக்கொண்டு அவ்விடத்திலிருந்து கருடரூபராய் புறப்பட்டு சேஷாசலம் சேர்ந்து, சாமான்யமான ராஜகுமாரனைப்போல் வேடம் தரித்து புஷ்கரணியில் ஸ்நானம் செய்யும்போது வைகானஸ வம்சத்தார்கள் அந்த ராஜகுமாரன் வேஷத்திலுள்ள ஸ்ரீனிவாசனுக்கு மஹா சங்கல்பம் செய்வித்து, போஜென வசதிகள் செய்து மந்திரங்களால் அவரை ஆசீர்வதித்து அனுப்பினர். பிறகு ஸ்ரீனிவாசன் சேஷாசலத்திலிருந்து புரப்பட்டு பத்மஸரோவரம் சேர்ந்து வாயுதேவனை நினைத்தார்.

அப்போது வாயுதேவன் பிரத்யக்ஷமாய் மிகவும் வணக்கத்துடன் ஸ்ரீனிவாசனுக்கு நமஸ்கரித்து தேவரின் ஆக்ஞையை தெரிவிக்கும்படி கோரினர். அவ்வார்த்தைகளைக் கேட்டதும் ஸ்ரீனிவாசன் வாயுதேவனைப் பார்த்து நீ சுவர்க்கலோகத்திற்கு சென்று அவ்விடம் மந்தாக்கினியில் பிரகாசிக்கின்ற ஸஹஸ்ரதள பத்மகமலத்தில் ஒன்றை இந்திரனைக்கேட்டு கொண்டுவரும்படி கூறினர். அதற்கு வாயுதேவன் சுவாமீ! ஸஹஸ்ரதள பத்மகமலங்கள் சுவர்ண முகியில் அநேகமிருக்கின்றன, இவ்விடத்திலிருந்தே ஒன்றை எடுத்து வருகிறேனென்று சொன்னர் அவ்வார்த்தைகளைக் கேட்ட ஸ்ரீனிவாசன் ஆகாயவாணி தனக்கு சொல்லியதை வாயுதேவனுக்கு தெரியப்படுத்தி, சத்தியலோகத்திலுள்ள கமலத்தையே யெடுத்து வரும்படி கூறினர் உடனே வாயுதேவன் சுவர்க்கலோகம்சென்று தேவேந்திரனின் அனுமதி பெற்று மந்தாக்கினியிலுள்ள ஸஹஸ்ரதள கமலமொன்றை எடுத்துவந்து ஸ்ரீனிவாசனுக்கு கொடுத்தார். ஸ்ரீனிவாசன் அக்கமலத்தைப் பெற்று, வாயுதேவனைப் பார்த்து நான் இவ்விடம் தவம்செய்ய எண்ணியுள்ளேன், இச்செய்தியை யாருடனும் தெரிவிக்காமலிருக்கும்படி சொல்லி வாயுதேவனை அனுப்பிவைத்து அந்த ஸஹஸ்ரதள கமலத்தை பத்மஸரோவரத்தில் பிரதிஷ்டை செய்து அக்கமலத்தின் கிழக்கு திசையில் சூரியனை பிரதிஷ்டித்து நிர்மலமான மனதுடன் அக்கமலத்தின்மேல் மனதை நிறுத்தி லக்ஷ்மி மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு, தவம் செய்துவந்தார்.

## ரம்பை, ஊர்வசி முதலானவர் ஸ்ரீனிவாசனின் தவத்தை பங்கபடுத்தல்

இந்திரன் இந்த விருத்தாந்தத்தை அறிந்து பூலோகத்தில் யாரோ ராஜகுமாரன் இந்திரபதவியைக் கோரி தவம்செய்து வருவதாய் நினைத்து, ரம்பை, ஊர்வசி, மேனகை, திலோத்தமை முதலான தேவதாசிகளை அழைப்

பித்து, அவர்களைப் பார்த்து பூலோகத்தில் ஒரு ராஜ குமாரன் இந்திரபதவியை கைப்பற்றவெண்ணி கோரதவம் செய்து வருகிறன் நீங்கள் அந்த ராஜகுமாரனுடைய தவத்தை பங்கப்படுத்தி வரவேண்டுமென்று அவர்களை அனுப்பிவைத்தான். அதைக்கேட்ட ரம்பை முதலான தேவதாசிகள் பூலோகத்தில் பத்மஸரேவரத்தில் தவம் செய்துக் கொண்டு மாறுவேடத்திலுள்ள ஸ்ரீனிவாசனின் எதிரில்வந்து அவரை அநேகவிதங்களில் மோஹிக்கச் செய்தனர். ஆனல் அந்த பரந்தாமன் அவர்களுடைய மோஹவலையில் விழாதிருக்க, அந்நடன மாதர்கள் அவ் வனத்திலுள்ள புஷ்டங்களால் அவைர விதவிதமாக அலங்க ரித்தனர். அப்போது ஸ்ரீனிவாசன் அவர்களைப் பார்த்து நீங்கள் செய்துவரும் சேவை எனக்கு சந்தோஷமூட்டியது ஆனல் நீங்கள் சிறிது நேரம் நாட்டியகானம் செய்யுங்க ளென்று கூறினர் அவ்வார்த்தைகளைக் கேட்டு அவர்கள் அவ்வனத்திலுள்ள புஷ்பங்களைப் பரித்து வந்து ஸ்ரீனிவாச னுக்கு பக்கத்திலுள்ள ஒரு சிலைக்கு அலங்கரித்து, வனலக்ஷ் மிக்கும் விஷ்ணுவுக்கும் விவாஹம் செய்த மாதிரிசெய்து, லக்ஷ்மியின்மேல் விஷ்ணு காதல்கொண்டது போல பாட்டு கள் பாடி, நாட்டியங்கள் செய்துக்கொண்டு, எப்படி யாகிலும் இந்த ராஜகுமாரனின் மனதை மாற்றி தவத்தை பங்கப்படுத்த வேண்டுமென்றெண்ணி மிகவும் கவர்ச்சிகர மான பாட்டுகளைப் பாடிக்கொண்டும் நாட்டியமாடிக் கொண்டும் ஸ்ரீனிவாசனை மோஹிக்கச்செய்தனர். ஆனல் பகவான் இவர்களுடைய நாட்டியங்களைப்பார்த்து சந்தோஷ மடைந்தார். ஆனல் இவருடைய மனம் எள்ளளவேனும் மாறுபடவில்லை. அந்நடனமாதர்கள் ஸ்ரீனிவாசன்மேல் மிகவும் மோஹங்கொண்டது போல் நடித்தனர். அதற்கும் பகவான் உட்படாததைப் பார்த்து ஒருவரோடொருவர் இப்படியாக யோசிக்கலானர்கள்: இந்த நரபதி விஸ்வா மித்திரரை விடவும் கிருஷ்ண துவைபாயணரைக் காட்டிலும் மனேதிடங் கொண்டவர்; இவர் சாமான்ய மனிதரல்ல இவரை நாம் பங்கப்படுத்த முடியாது, இந்த தவசேஷ்டரை பலாத்கரித்தால் நாம் சாபத்திற்குள்ளாவோமென்று

யோசித்தனர். ஸ்ரீனிவாசல் இவர்களுடைய மனோ பாவத்தை தெரிந்துக்கொண்டு,இவர்களை ஏமாற்ற நினைத்து மிக சௌந்தர்யமுள்ள ஒரு விஸ்வமோஹினியை சிருஷ்டித் தார். அவர்கள் அந்த மோஹினியைப் பார்த்து ஆஹா! இந்த மஹாபுருஷனே மோஹினியை சிருஷ்டித்திருக்க வேண்டும், இவளுடைய சௌந்தர்யத்திற்கு நாம் சமமான வர்களல்ல. நாமே தோற்றுப் போனோம். நாம் இம் மஹானின் மஹிமைகளைத் தெரிந்து கொள்ளாமல் அவரை பங்கப்படுத்த நினைத்தது நம் மதியீனமென்று எல்லோரும் ஸ்ரீனிவாசனுக்கு நமஸ்கரித்தது புறப்பட்டுச் சென்று தேவேந்திரனுக்கு நமஸ்கரித்து சுவாமீ! நாங்கள் அந்த நரபதியின் தவத்தை பங்கப்படுத்த முடியாமல் வந்து விட்டோம் அவர் சாமான்யமானவ ரென்று நினைத்தோம் அவர் சாக்ஷாத் விஷ்ணுசொரூபரேதான் என்று கூற, அவ் வார்த்தைகளைக் கேட்டு தேவேந்திரன் மிக்க பயந்தவனாய் விஷ்ணுதேவனே தவம்செய்து வருவதாய் தெரிந்துக் கொண்டு உடனே ஸ்ரீனிவாசனிடம் சென்று நமஸ்கரித்து, வணக்கத்துடன் தெரியாமல் செய்த என்னுடைய அபரா தங்களை மன்னிக்கும்படி அநேகவிதங்களில் பிரார்தித்தான். அப்போது ரமாநாதன் இந்திரனை மன்னித்து, அவர் சிருஷ் டித்த மோஹினியைப் பார்த்து நீ பிரஜைகளால் பூஜைகள் பெற்று இவ்வுலகிலேயே யிருக்கும்படி சொல்லி அவளை அனுப்பிவிட்டு, தான் எப்போதும்போல் தவம்செய்துக் கொண்டிருந்தார்.

சேஷாசலத்தில் பத்மாவதியை ஸ்ரீனிவாசன் விட்டுப் பிரிந்தது முதல் பத்மாவதி ஊணுறக்கமின்றி ஸ்ரீனிவாசன் மேல் கலவரமுற்றவளாய் என் நாதன் என்னைவிட்டு இருப்பத்திரண்டு வருஷங்களாயிற்று இவ்வளவு காலமாய் எவ்விடமிருப்பதும் தெரியவில்லை, அந்த ரமாதேவியுடன் கூடி சரஸஸல்லாபங்களாடிக் கொண்டு என்னை மறந் தாரோ அல்லது லக்ஷ்மியைக் காணுமல் பரிதவிக்கின்றாரோ; லக்ஷ்மிதேவி அவ்விடமில்லாமற் போனதற்கு காரணம்

என்னவாயிருக்கும் என்று சிந்தித்துக் கொண்டே மெய்மறந்தனள். அப்போது ஸ்ரீனிவாசன் தவவேடத்தில் பத்மாவதிக்கு கனவில் தோன்றினார். பத்மாவதி திடீரென்றெழுந்து தன் நாதன் தவவேடத்தில் தனக்கு தோன்றக் காரணமென்னவென்று யோசித்து துக்கமடைந்து, வகுளாதேவியைப் பார்த்து அம்மா! என் நாதன் கனவில் தவக் கோலத்துடன் தோன்றினார். அதுமுதல் எனக்கு மிகவும் பயமாயிருக்கிறது யென்று கூறினாள். அவ்வார்த்தைகளைக் கேட்ட வகுளாதேவி உன் நாதன் சீக்கிரத்திலெயே லக்ஷ்மி சமேதராய் வந்து விடுவாரென்று பத்மாவதிக்கு தைரியம் சொல்லி தேற்றினாள்.

# லக்ஷ்மி ஸ்ரீனிவாசன் மார்ப்பில் (வக்ஷத்தில்) சேருதல்

கபிலாஸ்ரமத்திலுள்ள லக்ஷ்மி இவ்வருராக யோசிக்கலானாள்: எனக்காக என் நாதன் பத்மஸரோவரத்தில் தவம் செய்து வருகிறார். ஸ்ரீனிவாசனுக்காக பத்மாவதி சேஷாத்ரியில் துக்கித்துக்கொண்டிருக்கிறாள். நானே இவர்களுக்கு கஷ்டங்களுண்டாக்கியதாய் தோன்றுகிறது இதற்கு என்ன செய்வேனென்று யோசித்து, கபில முனிவரைப் பார்த்து, முனீந்திரா! ஸ்ரீனிவாசன் பத்மாவதியை விவாஹம் செய்துக்கொண்டு அவளை சேஷாத்ரியில் விட்டு, அவா பத்மஸரோவரத்தில் என்னைக்குறித்து தவம் செய்து வருகிறார்; நான் என்ன செய்வேனென்று கூற, கபில முனிவர் அம்மா! பிரதி யுகத்திலும் அப் பரந்தாமனின் வக்ஷஸ்தலத்தில் வசித்து அவரை விட்டுப் பிரியாமலிருந்த நீ அவரை விட்டுப்பிரிய காரணமென்னமென்று வினவ லக்ஷ்மிதேவி துக்கமடைந்து நீங்கள் சொன்னபடி நான் அவரைப் பிரியாமல் அவருடைய வக்ஷஸ்தலத்திலேயே சுகமாய் வசித்து வந்தேன். ஒரு சமயத்தில் மூடாத்மனை பிருகு நான் வசித்து வந்த ஸ்ரீனிவாசனின் மார்ப்பில் உதைத்தான். பரபுருஷனின் பாதம் பட்டதினால் பதிவிரதா தர்மத்திற்கு பங்கமுண்டாக்குமென்று நினைத்து விஷ்ணுவை

விட்டு கோல்லாபுரத்தில் வசித்து வந்தேனென்றாள். அவ்வார்த்தைகளைக் கேட்ட முனிவர் அம்மா! நீ சகலமும் அறிந்தவள்; பிருகு உன்னுடைய குமாரனே தவிர மற்றெவனுமில்லை; இவ்விருத்தாந் தந்தை உன் பதிஉனக்கு தெரிவித்தாரோ இல்லையோ, ஆனாலும் பிருகு உத்தமனாக யில்லாவிட்டால் அம்மஹாவிஷ்ணு பிருகு ரிஷியை மன்னித்தனுப்புவாரா? உன் நாதன் மன்னிக்கும்போது நீயும் மன்னிக்க வேண்டுமே தவிர நிராகரிப்பது தருமமென்று நீ எத்தனையோ தவங்கள்செய்து அம்மஹாத்மாவின் மார்பில் வசித்தாய், அந்த ஸ்தலத்தில் எளியவர் வசிக்கயியலாது, பிருகு உதைத்தான் என்றதினால் நீ உன் நாதனை விட்டுப் பிரிந்தது தருமமாகாது பிருகு பிரம்மதேவனைப் பரீக்ஷித்து, சங்கரனை பரீக்ஷித்து; திருமூர்திகளில் விஷ்ணுதேவனே ஸத்வகுண சம்பன்னரென்று நிரூபிப்பதற்காக யிப்படி நடித்தார். அதை தெரிந்துக்கொள்ளாமல் நீ பிருகு கர்வமடைந்து உன் நாதனை உதைத்தானென்று நினைத்து அவர்மெல் கோபமடைந்து யிப்படி நடந்துக் கொண்டாய், நீ அந்த பரந்தாமனைவிட்டு பிரிந்தவுடனே அவர் வைகுண்டத்தை விட்டு வேங்கடாசலம் சேர்ந்து அவ்விடம் சிலநாட்கள் கஷ்டங்களனுபவித்தாய் நடித்து சிலகாலம் கடந்த பிறகு பத்மாவதியை விவாஹம் செய்துக் கொண்டார். அவருக்கு எங்கிருந்தாலும் குறைவில்லை அவர் கருணாமூர்த்தியானதால் அவர் உன்னை அழைக்க வந்திருப்தூய் நினைத்து நீ இவ்விடம் தவம் செய்வது தகாது, நீ உலக மாதா, பர்த்தாவை கஷ்டத்திற்குள்ளாக்கி சிறு பிள்ளைகளைப் போல் விளையாட்டுத்தனமாய் இப்படி நடிப்பது தருமமாகாது இப்படியாக இருபத்திரண்டு வருஷங்கள் கழிந்து விட்டன இனி நீ ஹரிக்கு பிரத்யக்ஷமாய் அவருடைய வக்ஷஸ்தலத்தில் சேருவது உனக்கும் ஸ்ரீனிவாசனுக்கும் பத்மாவதிதேவிக்கும் எங்களெல்லோருக்கும் மங்களகரமாகும் எனக்கு தெரிந்தவரை யெடுத்துரைத்தேன். ஸ்ரீஹரி மானவனைப்போல் உன் நாமத்தை ஜபித்துக்கொண்டு தவம்செய்து வருகிறார். நீ இனி மந்திராதீனமா யிருக்கின்றாய் இனி எவ்விடமும் மறையமுடியாது, உன் மனோபாவத்தை மாற்றிக்கொண்டு

அக் கமலத்தில் தோன்றி ஹரியினுடைய மார்ப்பில் சேரும் படி சொன்னார். முனிவரின் சொற்களை கேட்டு நீங்கள் சொன்னவை யாவும் உண்மையே, என்றால் என் நாத னுக்கு இத்தனை கஷ்டங்களும் உண்டாயிற்று, அவருக்கு கஷ்டங்களுண்டாக்கிய இந்த சரீரத்தை இவ்விடமே தவம் செய்யும்படி விட்டு, நான் சாயாலக்ஷ்மியாய் ஸ்ரீனிவாசனின் வக்ஷஸ்தலத்தில் சேருவேனென்று சொல், அவ்வார்த்தை களைக் கேட்டு, கபிலமஹரிஷி அம்மா! நீ உன் நாதனுடன் அநேக அவதாரங்களெடுத்து கீர்த்திபெற்ற உலகமாதா! அம் மஹாவிஷ்ணு கபடநாடக சூத்ரதாரி. உங்கள் அவதார மஹிமைகளைக் கொண்டாட ஆதிசேஷனாலும் இயலாது நீங்கள் ஆதிதம்பதிகளாய் ஜெகத்ரியங்களையும் சிருஷ்டித்துக் கொண்டும் சம்ஹரித்துக் கொண்டும் ஏதோ காரணார்த்த மாய் நீங்களிந்த நாடகமாடி வருகிறீர்கள். உனக்கு அவருக்கும் பேதமுண்டா? நீ உலகமாதா, உன் பர்த்தா உலக ரக்ஷகன் எனக்கு தெரிந்தவரை சொன்னேன் இவற்றில் ஏதாவது தவருதலிருந்தால் என்னை மண்ணிக்க வேண்டுமென்று கேட்டார். அப்போது லக்ஷ்மிதேவி கபில மஹரிஷியைப் பார்த்து முனீந்திரா! உன் வார்த்தைகள் யாவும் உண்மையே நான் கரவீரபுரத்திலிருந்து வரும்போது இவ்வாருக நினைத்தேன்; ஸ்ரீனிவாசன் பத்மாவதியை விவாஹம் செய்துக் கொண்டு அவர்களிருவரும் சந்தோஷ மாய் காலங்கழித்து வரும்போது ஏகாந்த சமயங்களில் ஸ்ரீனிவாசனின் மார்ப்பில் நானெப்படி வசிப்பேனென்று நினைத்து இவ்விடம் வந்து சேர்ந்தேனென்று சொல்ல, அதைக்கேட்டு கபிலமுனிவர் அம்மா! மஹா விஷ்ணு யெடுத்த அவதாரங்களில் இது ஒரு அவதாரம் நீ அவரை எந்த அவதாரத்திய் விட்டுப் பிரிந்தாய்? எல்லா அவதாரங்களைவிட கிருஷ்ணாவதாரத்தில் பதினாராயிரம் கோபிகைகளுடன் அவரவர்களிஷ்டம்போல் இருக்க வில்லையா? அப்போது நீ எங்கிருந்தனை? என் பூர்வ புண்ணியத்தால் என் ஆசிரமத்தை பவித்திரமாக்க இவ்விடம் வந்தாயே தவிர வேறொன்றுமில்லை. இனி நீ உன் நாதனை விட்டுப்பிரிதல் தருமமல்ல. அவர் பிரதிஷ்டை செய்துள்ள

ஸஹஸ்ரதள பத்மத்தில் தோன்றி ஸ்ரீ ஹரியின் மார்ப்பில் சேர்ந்து சேஷாசலத்தில் பக்தர்களை காப்பாற்ற வேண்டு மென்று கேட்டருளினார். லக்ஷ்மி அவ்வார்த்தைகளைக் கேட்டு கபில மஹரிஷியின் அனுமதிபெற்று தன் பூர்வ சரீரத்தை அங்கேயே தவம்செய்யச் செய்து, அதிலிருந்து திவ்ய தேஜோ ருபமடைந்து சுவர்ணமுகி பத்மத்தின் துவாரத்தில் பிரவேசித்து மேலே பிரகாசிக்கின்ற பத்ம தளத்தின்மேல் உட்கார்ந்து கோடிசூரிய பிரகாசத்துடன் விளங்கினாள். இப்படி பிரகாசிக்கும் லக்ஷ்மியை ஸ்ரீனிவாசன் பார்த்தார் லக்ஷ்மீதேவி பகவானைப் பார்த்து வெட்கமடைந் தவளாய் தலை குனிந்தாள். அப்போது பகவான் என் தவ வேக்ஷத்தைப் பார்த்து லக்ஷ்மி என்னை பரிகசிக்கிறாளென்று நினைத்து தலையைக் குனிந்தார். இவர்களிருவரும் இப்படி அபிநயிப்பதை பார்த்த மன்மதன் இவர்களிப்படி யிருப்பது தகாதென்று நினைத்து ஸ்ரீனிவாசனுடைய ஹிருதயத்தில் பிரவேசித்து சந்தடி செய்ய ஆரம்பித்தான் அப்போது பிரம்மாதி தேவர்கள் அவரவர்களுடைய வாஹனங்களேறி பத்ம ஸரோவரத்தினிடம் சேர்ந்து லக்ஷ்மி ஸ்ரீனிவாசனின் மேல் புஷ்பமாரி பொழிந்து இவ்வாறு பிரார்த்தித்தனர்.

## ஸ்தோத்திரம்

ஸ்ரீமத்பரந்தாம-ஜீவாளிஸ்தோம-ஸ்ரீமானனீலோல-
சிருங்கார ஸல்லீல

கந்தர்ப லாவண்ய-கஞ்ஜோத்ப வாகன்ய ஸத்குண்ய
ஸம்பன்ன-ஸம்ரக்ஷிதாபன்ன

ஸத்யவிரதாசார-சாதுப்பிஜோத்தார சாராம்புத ஸ்யாம்
ஸம்பூர்ண ஸத்கார

வேதாந்த சஞ்சார-விஸ்வம்பராதார-ஸ்ரீவேங்கடாதீச-
ஸசித்பிரகாசா

பராகேச லோகேச-வாகீஸ கௌரீஸ-நாகேஸ
வந்தியாங்ரி-பத்மத்வயா

ந்த்யஸத்யா ந்வயா ஸத்தியாசாந்திர-யோகிந்திரஹ்ருத்
பத்ம சிருங்கா சுபாங்கா ।
சுசாரித்ர மித்ராப்ஜ நேத்ரா-தர்த்ரீ மஞ்ஜேல்லாஸா
தானப்ரியா-ஸ்ரீனிவாஸா-எம்மை
கிருபைகூர்ந்து பார்ப்பாய்-எம் தந்தையே-சேஷாசலவாசா
நரஸிம்மாவதார நமஸ்தே நமஸ்தே நமஸ்தே ॥

என்று பிரார்த்தித்து, பத்மத்தில் பிரகாசிக்கும் லக்ஷ்மி யைப் பார்த்து,

லக்ஷ்மீம் க்ஷீரஸமுத்ரராஜதனயாம் ஸ்ரீரங்கதாமேஸ்வரீம் ।
தாசீபூத ஸமஸ்த தேவவினுதாம் லோகைக தீபாங்குராம் ॥
ஸ்ரீமன்மந்த கடாக்ஷலப்தவிபவே பிரமேந்திர கங்காதராம் ।
துவாம் திரைலோக்கிய குடும்பினீம் ஸரஸீஜாம்
வந்தே முகுந்தப் பிரியாம் ॥

லக்ஷ்மி பகவானின் வக்ஷத்தில் சேர்ந்து, சேஷாத்ரி பூப்பிரசித்தியுற்று பிரகாசிக்க என்மீது கிருபை செய்யும்படி பிரார்த்தித்தனர்.

கார்த்திகை சுத்த பஞ்சமி வியாழக்கிழமை உத்திராடம் கூடிய சுபதின மாதலால், இச் சுபதினத்தில் ஸ்ரீனிவசனின் வக்ஷஸ்தலத்தில் சேரவேண்டுமென்று பிரம்மா ருத்திரர்கள் லக்ஷ்மிதேவியை பிரார்திக்க, விஜயலக்ஷ்மி பதில் பேசாம லிருந்தனள். அதைக்கண்டு பிரம்மதேவன் பிருகுரிஷியைப் பார்த்து கண்ஜாடை செய்தார். அப்போது பிருகுரிஷி வீரலக்ஷ்மியை சமீபித்து சாஷ்டாங்க தண்டப்பிரணாமங்கள் செய்து அம்மா! இனியாகிலும் என்னுடைய பிழையை மண்ணித்து, நான் உன் தனயனென்று தெரிந்து என்னை ஆதரித்து என் தந்தையின் மார்பில் சேர்ந்து உலக கல்யாண முண்டாக்கும்படி பிரார்த்தார். பிருகுவின் பிரார்த்தனையைக் கேட்டு பிருகுவை ஆசீர்வதித்து உன் தைரியததையும் திடபக்தியையும் தெரியாமல் ஸகலகுண ஸம்பன்னரான என் நாதனை சந்தேகிக்கச் செய்த என்

ரஜோ குணத்திற்கு சமயம் வந்ததால் என் பிராணநாதனை விட்டு பரதேசியாய் சில காலம் கழித்து என் நாதனால் உக்ர தவம் செய்வித்தேன்; விதி யாரையும் விடாது இது என் தவறுதலுமில்லை, உன் தவறுதலுமில்லை, நம்மை இந்த கபட நாடகத்திற்குள்ளாக்கியது அவர் செயலே யல்லாமல் வேறில்லை யென்று சொல்லி, தன் நாதன் தன்னையெடுத்து அவருடைய மார்பில் வைத்துக்கொள்வாரென்ற உத்தேசத்தினால் ஸ்ரீனிவாசனின் பாதங்களின்மேல் தன் பார்வையை செலுத்தி ஒரே மனத்துடன் தங்க சிலைப்போல் நின்றிருந்தனள். பிரம்மதேவன் லக்ஷ்மியின் மனோபாவத்தை தெரிந்துக் கொண்டு ஸ்ரீனிவாசனைப் பார்த்து அனுமானித்து வந்தார். ஸ்ரீனிவாசன் பிரம்மா ருத்திரர்களைப் பார்த்து சந்தேகமேன்? ஸதா என் மார்ப்பில் வசித்துவரவேண்டுமென்று நீங்கள் சொல்லும்வரை லக்ஷ்மி மார்பில் வசிப்பதாயில்லை, உங்கள் விருப்பப்படி என் மார்ப்பில் வசிக்க வேண்டுமென்று யிருப்பதாய்ச் சொல்லி, பிரம்ம ருத்திரர்கள் லக்ஷ்மியையப் பார்தது, அம்மா! நீ இந்த சுப சமயத்தில் பரந்தாமனின் வக்ஷஸ்தலத்தில் சேர்ந்து எப்போதும்போல் வசிததுவர வேண்டுமென்றி பிரார்த்தனர். அப்போது லக்ஷ்மிதேவி அவர்கள் சொல்லைக்கேட்டு, புன்னகையுடன் அன்ன நடை நடந்து தன் கால் சிலங்குகள் கலீர்க் கலீரென் றொலிக்க, இடையில் தரித்திருந்த தங்க மணிகள் ஓசையிட, நாசிகாபரணங்களாலும், சிருங்காரமான மையை தீட்டிய கண்களுடன், நெற்றியில் பிரகாசிக்கும் திலகத்துடன், சந்தன பரிமளங்கள் நாற்புரங்கலிலும் வீச, புன்னகை தவழும் வதனங்களுடன் பத்மகலத்திலிருந்து மெதுவாய் தன் நாதனிடம் முன்பு க்ஷீரசாகரத்திலிருந்து வந்தமாதிரி வந்து சேர்ந்து, தான் வசித்துவந்த ஸ்ரீனிவாசனின் வக்ஷஸ்தலத்தில் சந்தன கஸ்தூரி முதலிய பரிமளங்களிட்டு ஒரு புஷ்பமாலையை ஸ்ரீனிவாசனின் கழுத்தில் போட்டனள், அப்போது ஸ்ரீனிவாசன் கருணைக் காட்டி தன் இரண்டு கரங்களாலும் லக்ஷ்மிதேவியை யெடுத்து தன் மார்பில்வைத்துக் கொண்டார் அந்த சமயத்தில் ரம்பை, ஊர்வசி முதலான நடன மாதர்கள்

ஆகாயவீதியில் நாட்டியமாடினர். கந்தர்வ சதிபதிகள் பாட்டுகள்பாட, தேவர்கள் அந்த தம்பதிகளின் மேல் புஷ்பமாரி பொழிந்தனர். வரலக்ஷ்மி பிறந்த இந்த பத்ம ஸரோவரத்தில் பிரம்மாதி தேவர்கள் ஸ்நானம்செய்து லக்ஷ்மி ஸ்ரீனிவாசர்களைக் கொண்டாடினர். இந்த புண்ணிய தீர்த்தத்தில் மார்க்கசிர சுத்த பஞ்சமியன்று ஸ்நானம் செய்பவர்களுக்கு இந்த வீர லக்ஷ்மி தன கனக வஸ்து வாஹனங்கள் அளித்து, கடைசியில் மோக்ஷம் தருவதாய் இந்த க்ஷேத்திரத்தைக் கொண்டாடி, அவரவர்களுடைய வாஹனங்களிலேறி ஸ்ரீனிவாசனுடன் சேஷாசலத்திற்கு சென்றுக் கொண்டிருக்கும் போது, சேஷாசலத்திலுள்ள பத்மாவதி ஸ்ரீனிவாசன் லக்ஷ்மிசமேதராய் வரும் விருத்தாந் தத்தை தெரிந்துக் கொண்டு மங்களஸ்நானம் செய்து ஆடை யாபரணங்களணிந்து கொண்டு, ஸ்ரீனிவாசனையும் லக்ஷ்மிதேவியையும் எதிர்கொண்டழைத்து அவர்களுக்கு மங்களாரதி யெடுத்து சாஷ்டாங்க தண்டப் பிரணாமங்கள் செய்தனள். அப்போது லக்ஷ்மி ஸ்ரீனிவாசர்கள் பத்மா வதியை ஆதரித்து, ஆனந்த நிலயத்தில் பிரவேசித்து, இச் சாமாத்திரத்தில் சகல பதார்த்தங்களையும் ஆகர்ஷித்து பிரம்மாதி தேவர்களுக்கு விருந்தளிந்து, சந்தன தாம்பூ லங்களுடன் வஸ்திரா பரணங்களையும் கொடுத்து அவர்களை திருப்தி செய்தார். அவர்கள் சந்தோஷத்துடன் அவரவர்க ளுடைய வாஹனங்களேறி தம் நிவாசங்களுக்குச் சென்றனர் அதுமுதல் லக்ஷ்மி, பத்மாவதி, ஸ்ரீனிவாசர் சுகமாயிருந்தனர்.

ஒரு நாள் ஸ்ரீனிவாசன் லக்ஷ்மியைப் பார்த்து நீ இவ் விடத்திற்கு வந்ததால் எனக்கு மிகவும் சந்தோஷமுண்டா யிற்று. என் விவாஹத்திற்காக குபேரனிடம் கடன் பெற்றேன், அந்த கடனை தீர்க்க வழிகாணாமலிருக்கிறே னென்று விநோதமாய் கூறினார். அவ் வார்த்தைகளைக் கேட்ட லக்ஷ்மி, உம்முடைய விவாஹத்திற்கு நான் வந்திருக்கும்போது எனக்கு தெரியப் படுத்தியிருந்தால் உங்களுக்கு வேண்டிய தனம் கொடுத்திருப்பேன் என்னைக் கேளாமல் செய்த கடனை நீங்களே தீர்க்க வேண்டுமே தவிர

இப்போது என்னிடம் தெரிவித்தால் நான் என்ன செய்வே னென்று பதிலளித்தாள். அதைக்கேட்டு ஸ்ரீனிவாசன் லக்ஷ்மியைப் பார்த்து நீ என்மேல் கோபமடைந்து கொல்லா புரத்திற்கு சென்றாய், என் விவாஹத்திற்கு உன்னை அழைக்க சூரியனை அனுப்பினேன் நீ என்மேல் கருணைக் காட்டி சூரியனுடன் வந்து சேர்ந்ததை பரமானந்தமென்று கருதி னேன் உன்னை விவாஹத்திற்கு அழைத்து தனம் வேண்டு மென்றெப்படி கேட்பேன்? குபேரனுக்கு வருஷாவருஷம் வட்டி செலுத்தும்படியாக பத்திரம் எழுதி கொடுத்து தனத்தை பெற்றுக்கொண்டேன், இதுவரையில் ஒரு வருஷ வட்டியாகிலும் செலுத்த முடியாமல் நான் ஒரு யோசனை செய்துள்ளேன் அதற்கு நீ சம்மதிக்க வேண்டும், நீ குபேரனுடைய கடனை தீர்க்க வேண்டியதில்லை. நீ கலி யுகத்தில் என் பக்தர்களுக்கு தனம் கொடுத்து வரவும். அவர்கள் அத் தனத்தை யடைந்து கர்வத்துடன் பாபங்கள் செய்து வருவார்கள் அவர்களுடைய பாப காரியங்களினால் வியாதி முதலிய இடுக்கண்கள் உண்டாகும் அப்போது என்னை தியானிப்பார்கள், நான் அவர்களுடைய கனவில் தோன்றி எனக்கு பிரார்த்தனைகள் செலுத்தி பண முடிப் புகள் கட்டச் சொல்லி வெட்டி காசுகள் பெறுபவனென்று பிரசித்தி பெற்று அவர்களிடமிருந்து வட்டிக்கு வட்டியைக் கூட்டி நீ கொடுத்த திரவ்யத்தினின்றும் தனத்தைப் பெற்று அந்த தனத்திலிருந்து குபேரனுக்கு வட்டிமாத்திரம் வருஷா வருஷம் சேலுத்தக் கொண்டு, இக்கலியுகத்தில் இவ்வாறு என் அரசாட்சியைநடந்தி,கலியுகமுடியில் குபேரனுக்குகடன் தீர்த்து நாம் வைகுண்டத்திற்கு செல்வோமென்று கூறினார். அதற்கு லக்ஷ்மி தன் நாதனைப் பார்த்து, நான் பக்தர்களுக்கு திரவ்வியம் கொடுப்பேன் அவர்கள் அதை நியாயமான வழியில் சிலவிடாமல் அதை தீய வழிகளில் சிலவிட்டு அத் தனத்தினால் மானவர்களுக்கு கஷ்டங்களுக்குண்டாக்கு பவர்களை காப்பாற்றுவது கஷ்டமல்லவாயென்று கேட்க, அதற்கு ஸ்ரீனிவாசர் மானவர்களுக்கு திரவ்வியம் கொடுப் பது உன் கடமை, அவர்களுக்கு வியாதி முதலிய உபாதி

களை உண்டாக்கி அந்த தனத்தை அவர்களிடமிருந்து யெப்படி வரவழைத்துக் கொள்ளவேண்டுமோ மற்றும் அவர்களை எவ்விதம் காப்பாற்ற வேண்டுமோ அது என் கடமை, நீ கொடுத்த திரவ்வியத்திலிருந்து எனக்கு கொஞ்சமாகிலும் செலுத்தியவர்கள் அதிக பலனை அடைவார்கள், செலுத்தாதவர்கள் அந்த தனத்தையிழந்து தரித்திரர்களாய் என் க்ஷேத்திரத்தில் சேர்ந்து, என் க்ஷேத்திரத்திற்கு வரும் பக்தர்களுக்கு சேவைசெய்து அவர்களுடைய அனுக்கிரஹம் பெற்று, ஸதா என்னை தியானித்துக் கொண்டு மறு ஜன்மத்தில் என் பக்தர்களாய் அவதரித்து நற்கதியடைவார்கள். இப்படி செய்யாமல் என் பக்தர்களை மோசம் செய்து, எனக்கு பக்தர்கள் சமர்பிக்கும் திரவ்வியங்களை பராதீனம் செய்து, என்னை லக்ஷியம் செய்யாமல், இந்த க்ஷேத்திரத்தில் பாபிகளாகவும் அங்க ஹீனர்களாயும் குருடர்களாயும் ரோகிகளாகவும் ஜன்மித்து, என் க்ஷேத்திரத்தில் பிச்சையெடுத்துக் கொண்டு, அநேக கஷ்டங்களை யனுபவித்து கடைசியில் என் பக்தர்களின் ஆசிர்வாதங்கள் பெற்று என் பாதாரவிந்தம் சேருவார்கள். இதற்காக நீ சந்தேகமடைய வேண்டாமென்று சொன்னார். அவ்வார்த்தைகளைக் கேட்டு லக்ஷ்மிதேவி சந்தோஷமடைந்து பகவானைப் பார்த்து சுவாமீ! உங்களிடம் நான் பொய்ச் சொல்ல மாட்டேன்; உண்மையே சொல்லுகிறேன். கலியுகத்தில் மானவர்கள் தான தர்ம பரோபகாரங்கள் செய்து அதை உங்களுக்கு அர்ப்பணம் செய்பவர்களுக்கு தனதான்ய சம்பத்துகள் அளிப்பேன். அப்படி உங்களுக்கு அர்ப்பணம் செய்யாத லோபிகளுக்கு தனம் நசிக்கச் செய்வேனென்று சொல்லி, நாதனின் அனுமதி பெற்று கபிலாஸ்ரமம் சேர்ந்து தன் பூர்வ சரீரத்தில் பிரவேசித்து தன் ஹிருதயத்தில் நாதனின் ரூபத்தை நிறுத்தி தவம் செய்துவந்தாள்.

# சுகமுனிவர் சூரியனுக்கு சிருஷ்டி ஸ்திதிலயங்களை தெரிவித்தல்

சுகாஸ்ரமத்தில் தவம் செய்துவந்த சுகமுனிவர் இந்த உலகத்தைவிட்டு பரமபதமடைய உத்தேசித்து புறப்பட்டு சூரிய மண்டலத்தைசமீபித்து அம்மண்டலத்தை தாண்டிச் செல்ல முயன்றார். அதைக் கண்டு சூரியன் சுக முனிவரை தடுத்து நீங்கள் என் மண்டலத்தை கடந்து செல்ல நினைக்கிறீர்கள். உங்களுடைய பிதுருக்கள் இவ்வுலகத்திலேயே வசித்துவர நீங்கள் சுவர்கலோகம் செல்ல முடியுமா நீங்கள் விவாஹம் செய்துக்கொண்டு புத்திர சந்ததி பெற்று உங்களுக்கு பதில் உங்கள் புத்திரனை இவ்வுலகில் வசிக்கச் செய்; நீங்கள் ஆசிரம தர்மங்களைவிட்டு மஹா விரக்தி பெறுவது தகாது பூர்வம் ஒழுங்காய் வேதங்களைப் படித்து தேவ ரிஷிகளின் ருணங்களை தீர்த்தீர்கள், இனி மனைவியை கைபிடித்து சற்புத்திரனைப் பெற்று, பித்ருருணங்களைத் தீர்த்து பிரம்ம தேஜமடைந்து பிறகு என் மண்டலத்தை தாண்டி பரமபதம் சேரும்படி புன்னகையுடன் சொன்னார். அவ்வார்த்தைகளைக் கேட்ட சுகமுனிவர் சூரியனைப் பார்த்து மார்த்தாண்டா! நீ திருமூர்த்தியாத்மகன். கர்மாவுக்கு சாக்ஷியாய் இஜ்ஜெகத்திற்கு தெய்வமாய் பிரகாசித்துவரும் உனக்கு தெரியாத தர்மங்களில்லை ஆனாலும் எனக்கு தெரிந்தவற்றை சொல்கிறேன்; எப்படியென்றால் மாதாவின் கர்ப்பத்தில் தேஹத்தை யடைந்து இந்த பூமியில் பிறந்தது முதல் உதய அஸ்தமானங்களுண்டாக, புருஷனின் ஆயுவு க்ஷீணித்துப்போவதால் இந்த சரீரங்கள் அனித்யமென்று நினைத்து சதுராஸ்ரமங்களும் நடத்தி தேவ, ரிஷி, பிதுரு சம்பந்தமான ருணங்களை தீர்த்து ஞான வைராக்கியங்களை சுற்றுக்கொள்வது வேதாந்த கர்மாவும். சதுராஸ்ரம தர்மங்களில் நடப்பது நியாயமே ஆனாலும் இந்த தேஹம் நீரில் குமிழ்போல் அநித்யமானதால் ஞானியானவன் கர்மாவான இந்த சம்சாரசாகராரண்யத்தில் பிரவேசிக்க மாட்டானென்று கூறினார். அவ்வார்த்தைகளைக் கேட்ட சூரியன் சுக முனிவரைப் பார்த்து சிருஷ்டி

காலத்திலேயே பிரம்மதேவன் இந்த வர்ணாஸ்ரம தர்மங்களை யேற்படுத்தி, இந்த லோக வாசிகள் அதை அநுசரணை செய்துவர அதைவிட்டு நீங்கள் இந்த மண்டலத்தை தாண்டிப் போக பார்க்கிறீர்கள் என்றான். அப்போது சுக முனிவர் சூரியனைப் பார்த்து. பாஸ்கரா கேள்: வர்ணாஸ்ரம தர்மங்கள் மோக்ஷப் பிரதமானதென்று என் தந்தை எனக்குச் சொல்ல அதைக் கேட்டு அவருடன் தந்தையே முதல் தர்மத்திலேயே விவேகக் ஞானமுற்றவன் மற்ற ஆஸ்ர தர்மங்களை விட்டுவிட வேண்டுமா அல்லது அவற்றையும் அனுசரிக்க வேண்டுமாயென்று கேட்டேன் அதற்கு என் தந்தை என்மேலுள்ள பிரேமையினால் என்னைப் பார்த்து இந்த சந்தேகத்தை ஜனகராஜனிடம் போய் கேட்டால் விவரமாகுமென்று கூறினார். பிறகு நான் மிதிலை ராஜனிடம் சென்று என் சந்தேகத்தை தெரியப்படுத்தினேன் ஜனக ராஜன் என்னைப் பார்த்து மனோதிடமேற்பட ஆஸ்ரம தர்மங்கள் அனுசரிக்க வேண்டும் ஒரே ஆஸ்ரமத்திலேயே மனோதிட மடைந்தவர்கள் பிறகு ஆஸ்ரமதர்மங்களை விட்டு மிக்க விரக்திபெற வேண்டுமென்று எனக்கு போதித்தார். நான் அதுமுதல் மிக்க வைராக்ய மடைந்தேன் நீங்கள் என்னை குடும்பஸ்தனுக்கும்படி சொல்கிறீர்களென்றார் சூரியன் சுகமுனிவரைப் பார்த்து நகைத்து ஜனகராஜன் ஞானகர்மங்களை நடத்திக்கொண்டு ஸர்வ ஸமத்வமுற்று பூமியை பரிபாலித்துக் கொண்டு, புத்திரசந்ததி பெற்றவர் உங்களை விரக்தி பெறும்படி கூறினாரா? விஷ்ணுதேவனில் பிரம்மாவும், பிரம்மனில் வசிஷ்டரும், வசிஷ்டரிலிருந்து சக்தியும், சக்தியிலிருந்து பராசரரும், பராசரரிலிருந்து வியாசரும், வியாசரிலிருந்து நீங்களும் ஜன்மித்து நீங்கள் சந்ததியில்லாமல் என் மண்டலத்தை தாண்டிப்போக முடியுமா? புண்யாத்மனான நற்புத்திரன் ஒருவனைப்பெற்று இவ்வுலகில் வசிக்கச் செய்து போகவேண்டும். உன் பிதருகள் இந்த லோகத்திலிருக்கின்றனர். அவர்களுக்கு பணி விடை செய்ய புத்திரனை பெறும் வரையிலும் என் மண்டலத்தை தாண்டிச் செல்லலாகாதென்று சொன்னார். அப்போது சுகமுனிவர் தன் தபோ மஹிமையால் தன்னைப்

போலவே ஒரு சாயாசுகனை ஸ்ருஷ்டித்தார். அப்போது அந்த சாயாசுகன் தன் தந்தை சுகமுனிவருக்கும் சூரியனுக்கும் நமஸ்கரித்து நின்றான். சூரியன் சுகமுனிவருடைய யோகமஹிமைக்கு சந்தோஷமடைந்து, நீ இந்த சுகமுனிவரால் ஜன்மித்ததால் இந்த லோகத்தில் சாயாசுகனென்ற பெயருடன் பிரகாசிக்கும்படி ஆசீர்வதித்தான். சாயாசுகன் கைக்கூப்பியவாறு தன் தந்தையைப் பார்த்து, தந்தையே! என்னை சிருஷ்டித்தகாரணம் தெரிவித்தால் உங்கள் அனுமதிபெற்று நடந்து கொள்வேனென்று சொல்ல, அவ்வார்த்தைகளைக் கேட்ட சுகமுனிவர் மகனைப் பார்த்து, நீ பூலோகம் சென்று காசிக்ஷேத்திரமடைந்து அவ்விடம் என் தந்தைக்கு வேண்டிய பணிவிடைகள் செய்து அவருடைய அனுமதி பெற்று பிரகாசிக்கும்படி சொல்லி அசீர்வதித்து அனுப்பி, சூரியனைப்பார்த்து பிரபாகரா! உன் கிருபையால் புத்திரனைப் பெற்றேன். என்னை இனியாகிலும் உம் மண்டலத்மை தாண்டிச்செல்ல அனுமதிக்கும்படி கோரினார் அவ்வார்த்தைகளைக்கேட்ட சூரியன் நகைத்து, என் சொரூபமான ஜீவமஹத்வத்மை சொல்லும்படி கேட்க, சுகமுனிவர் சூரியனைப்பார்த்து ஜகஜ்யோதி ஸ்வரூபனான உன்னுடைய பிரபாவத்தை சொல்ல நான் தகுந்தவனா? ஆனாலும் எனக்கு தெரிந்தவரை சொல்லுகிறேனென்று சொல்லி சூரியனுக்கு நமஸ்கரித்து நாராயண பரப்பிரம்மனென்கிற சாஸ்வதமான ஸ்வரூபத்திலிருந்து பிரணவஸ்வரூபமான ஓம்சப்தம் உண்டாயிற்று அந்த சப்தம் வெளிப்பட்டு ஆகாயத்துடன் மோதியதால் உஷ்ணரூபமான பிரகாசம் உண்டாயிற்று. அந்த வாயு ஆகாசமார்க்கமாய் சென்றதால் உஷ்ணரூபமான பிரகாசம் உண்டாயிற்று, அந்த அக்னி விஸ்தாரமாய் பிரகாசித்து தன்னுள் வியாபித்ததினால் அந்த பிந்து திரவரூபமான சாரம் மஹா ஜலமாய் நிற்க, தேஜோரூபமான அப்பரமாத்மா அம்மஹா ஜலத்தில் நின்றார். அப்போது தங்கமான பிரகாசமாய் சில காலத்திற்கு பல விருக்ஷங்கள் பலன்களை கொடுப்பதுபோல் அநேககோடி பிரம்மாண்டங்களை சுருஷ்டித்து அப் பிரம்மாண்டத்தில் ஒவ்வொரு விதைக்கும் விருக்ஷ

மாய் அநேக விதைகளை அடைவதைப்போல் மூலகாரண மாய் தங்கமயமான பிரகாசம் சூரியரூபமாய் ஸ்தாவர ஜங்கமங்களான பிரபஞ்சத்தை தன் பிரபாவத்தால் ஜீவனாய் போஷித்து தன் பிரகாசத்தால நசிக்கச்செய்தும் ஆலமரவிதை பூஜலசம்பந்தால் விருக்ஷாக்ருதியாய் அந்த விருக்ஷத்தில் ஜீவனாய் நிலைத்தது போல் தங்கமயமான பிரகாசம் ஸப்தபர்வதம், ஸப்தசமுத்திரம், சப்தலோகங்க ளான பிரம்மாண்டமாய் நிலைத்து சூரிய ரூபமாய் பிரகாசிக் கின்றது. அந்த ஸ்வரூபமே ஸகல பூதங்களிலும் ஜீவமாய் எண்ணெயுடன் சேர்ந்து எரியும் வத்தியைப்போல ஞானம் பெற்று, அந்த ஞானததினால் தன் செவியார கேட்கவும் தேஹததினால் தொடவும் கண்களால் பார்க்கவும் நாவினால் ருசி பார்க்கவும் மூக்கினால் சுகந்தங்களை முகரவும் காதுகளி னால் கேட்கவும், பேசவும் கொடுத்தலும் கவனம் செலுத் தலும், விசர்ஜன செய்தலும் மனோபுத்தி, சித்தம் அஹங் காரம், சம்ஸயம், நிச்சயம, விசாரங்கள் தெரிவதுமே சூக்ஷ்மமான ஸ்வரூபமாகும். இனி பரஸ்வரூபம் எப்படிப் பட்ட தென்றால் அணுமுதல் சமஸ்த ரூபங்களில் மேக மண்ட லத்திலிருந்து மழை உண்டானால் பூமியிலுள்ள நதி கணறுகள் தடாகங்களில் தண்ணீர்நின்றபடி ஈஸ்வரனுடைய கிருபையி னால் சரீரத்தில் ஜலமானது அநேககோடி ஜீவராசிகளில் சதுர்வித பூதங்களிலும் நிலைதிருக்குமென்றார், அப்போது சூரியன் சுக முனிவரைப்பார்த்து தங்கமயமான பிரகாசம் இந்த சமஸ்த பூதங்களிலும் எவ்விதமாம் பிரவேசித்து பிறகு தன் இருப்பிடம் எப்படிப்போய் சேருகின்றதென்பதை தெரியப்படுத்தும்படி கேட்டார். அப்போது சுகமுனிவர் பிரம்மாண்டததை பிரகாசிக்கச் செய்து சுந்தரமாய், சுய ரூபமான தங்கமயமான மண்டலம் மிக்க பிரகாசமான திரவமாய் தெரிந்தது அதிலுள்ள சாரமே அமிர்த்தமாய் காலவசத்தால் திரவமாயும, மேகங்களாயும், குளிர்ச்சியாய் இந்த பூமியில் மழையினால் நிறைந்து பயிர்கள் வளர்ச்சி யடைந்து அநத பயிர்களில் சாரமான ஜீவசத்தாய் நின்று மானவர்களுக்கு அநேக விதங்களான ஆகார பதார்த்தங்க ளாய் பசுக்களுக்கு புல்லாய், சர்வத்திற்கும் வாயுரூபத்தில்

அநேக ஜீவகோடிகளுக்கும்; அநேக வித்ங்களில் ஆகாரமாய் அந்த சரீரத்திலுள்ள ஜடராக்னியரால் ஜீர்ணமடைந்து பாலில் நெய் பிரிவதைப்போல் பிந்துரூபமாய் முதலில் புருஷர்களில் நின்று பிறகு ஸ்திரீ கர்ப்பத்தில் கருரூபமடைந்து அந்த கருவில் ஆறு மாதங்களானதும் தேஜஸ்ஸு அடைந்து விருத்திபெற்று பிறகு ஜென்மகாலம் அடைந்ததும் பூமியில் பிறந்து அவரவர்களுடைய கர்மானுசாரம் அனுபவித்து பிறகு நாசனமடைவார்கள். நாசமடைவது எப்படி யென்றால் வாதம் பித்தம் கபம் முதலான வியாதிகளால் பூதங்கள் உள்ளாவதால் பள்ளத்தில் நின்ற மழை ஜலத்தை சூரிய கிரணங்கள் ஜலத்தை ஆகர்ஷிக்குமோ அதுபோல் ஸர்வ பூதங்களிலுள்ள ஜீவனையும் ஆகர்ஷித்து விடுவான். அப்போது அந்த ஸ்வரூபம் சூரிய கிரணங்களில் சேர்ந்து வாயுமண்டலத்தில் பிரவேசிதது ஆகாய மார்க்கத்தில் சந்திரமணடலம் அடைந்து சந்திரன் சூரியனில் ஐக்யமாகும் போது சூரியனில் சேர்ந்து காலானுசாரமாய் மறுபடியும் ஜன்மத்திற்குவரும் என்று கூறினார். சூரியன் சுகமுனி வரைப் பார்த்து இனி தேவர்களின் சுக ஸ்திதிலயங்களை சொல்லும்படி கேட்டான், அப்போது சுகமுனிவர் சூரியனைப் பார்தது, தேவா! ஆலை விதைக்கும் விரவருஷம் நெல்விதைக்கும் ஆறு மாதங்களும் ஆலை விதைக்கு ஆயிரம் வருஷங்கள் வரையிலும் பூ சம்பந்தமுண்டு. பிரம்மாதி தேவ சரீரங்களுக்கும் காலபேத முண்டு, தேவலோகத்தில் தேவர்கள் தங்கமயமான பிரகாஸம் அதிகமாய் பெற்று தீர்காயுஷ்யமடை கின்றனர். சாதாரண தேவர்களுக்கு சூரியனுள்ளவரை இந்திராதி லோகபாலகர்களுக்கு பிரம் மாண்ட பிரளயாவதியும் உண்டாக்கும் இவை எல்லாவற் றிற்கும் ஆதார பூதராய் சச்சிதானந்த நித்ய பரிபூர்ணராய் வாக்மன ஸாதீதராய் விளங்கும் ஸ்ரீமந் நாராயணனை பிரகாசிப்பதற்கு பிரதியாய் பிரகாசிக்கின்றது நீ என்று நிச்சயித்துக் கொண்டேன் என்றார். அதைக் கேட்ட சூரியன் சந்தோஷமடைந்து சுகமுனிவரைப்பார்த்து ஓ முனீந்திரா! உங்களுடைய மனோதிடமும் யோக ஸ்திதியையும் தெரிந்து கொள்ள இப்படியாக வினவினேன். நீங்கள் எல்லா வற்றிக்கும் சமாதானம் சொன்னதால் மிக்க சந்தோஷ

மடைந்தேன், நீங்கள் இனி என் மண்டலத்தை தாண்டி மேலுலகம் சென்று பரமபதமடையும்படி சொன்னார். உடனே சுகமுனிவர் ஸூரியனுக்கு நமஸ்கரித்து ஸூரிய மண்டலம் தாண்டி பரமபதம் போய்ச் சேர்ந்தார். அப்போது சாயா சுகன் தன் தந்தையின் கட்டளைப்படி காசிபுரி சேர்ந்து அவ்விடம் வியாசருக்கு பணிவிடைகள் செய்துகொண்டு சில யுகங்கள் கடந்த பின் கிருஷ்ண துவைபாயனரின் அனுமதி பெற்று சுகாஸரமம் சேர்ந்து பிராம்மண கன்னிகையை விவாஹம் செய்துக்கொண்டு சுகாஸ்ரமத்திலேயே வசித்து வந்தார்.

## லக்ஷ்மி சுகாஸ்ரமம் சேருதல்

லக்ஷ்மிதேவி கபிலாஸ்ரமத்தில் தன் நாதனைக் குறித்து தவம் செய்துக் கொண்டு சில யுகங்கள் கடந்தன. சேஷாசலத்திலுள்ள ஸ்ரீனிவாசன் தன் மனதில் நான் முதலில் லக்ஷ்மியைக் குறித்து தவம் செய்தேனென்று இப்போது என்னைக் குறித்து தவம் செய்துவரும் இந்த வீர லக்ஷ்மியை எப்படியாகிலும் பூலோகத்தில் நிவசிக்கச்செய்ய வேண்டு மென்று நினைத்தவராய் லக்ஷ்மியின் ஹிருதயத்தில் பிரகாசித்து வந்த தன் ரூபத்தை லக்ஷ்மிக்கு எதிரில் பிரத்யக்ஷமாகும்படி செய்தார். அப்போது லக்ஷ்மி தன் நாதன் பிரத்யக்ஷமானதாய் நினைத்து தன் நிஷ்டையை முடித்துக்கொண்டு கண்களைத் திறந்து பார்த்தாள். ஆனால் தன் எதிரில் ஸ்ரீனிவாசன் இல்லாததால் தன் தவம் விபலமாயிற்யென்று நினைத்து சிந்தனையுற்று கபிலமஹரிஷியினிடம் சென்றாள். கபில மஹரிஷி லக்ஷ்மியைப் பார்த்து அம்மா! உன் சபலத்தினால் உன் தவம் விபலமாயிற்று, நீ இனி தவத்தைவிட்டு சுகாஸ்ரமம் என்கிய பத்மஸரோவரத்தில் சேரவும் அவ்விடம் சாயாசுகன் உன்னைப் பூஜிப்பார். நீ அவ்விடம் சென்று உன் நாதன் கோரியபடி பக்தர்களுக்கு தரிசனம் கொடுத்து அவர்களுக்கு சர்வ சம்பத்துகளும் அளித்து வரும்படி கூறினார். அவ்வார்த்தைகளைக் கேட்டு தன் நாதனின் விருப்பத்தை பரிபாலிக்க எணணியவளாய் பாதாளத்தி

லுள்ள ஆதிசேஷனை தன் மனதில் நினைத்தாள். உடனே ஆதிசேஷன் பிர்த்யக்ஷமாய் சாஷ்டாங்க தண்டப்பிரணு மங்கள் செய்து லக்ஷ்மி மனோபாவத்தை அறிந்து, வேண்டிய வஸ்திரா பரணங்களும், நவரத்தினத்தாலான கிரீடமும், சந்தனம் முதலிய பரிமள திரவ்வியங்களும் அளித்து தங்க மயமான இரத்தினில்ஏற்றிக்கொண்டு,இரதத்திற்குபலமான யானைகளைக்கட்டி, பேரி மிருதங்கம் முதலிய வாத்தியங்க ளுடன் அநேக தேவர்கள் தொழ, நடுப்பகலில் பாதாளத்தி லிருந்து புறப்பட்டு பூமியை பிளந்து கொண்டு சேஷாசலத் திற்கு தென் பாகத்தில் பிரகாசிக்கின்ற பத்மஸரோவரத்தில் தோன்றினாள். அப்போது சாயாசுகன் லக்ஷ்மிக்கு சாஷ் டாங்க தண்டப் பிரணுமங்கள் செய்து அநேக விதங்களில் பிரார்த்தித்தார். ஆகாய மார்க்கத்தில் தேவர்களும் கருட கந்தர்வ கின்னர கிம்புருஷர்களும் வீரலக்ஷ்மியின்மேல் புஷ்பமாரி பொழிந்து ஜெய ஜெயவென்று கோஷங்க ளிட்டனர். இப்படி தேவர்கள் செய்யும் சந்தோஷ ஆரவாரத்தை சேஷாசலத்திலிருக்குப் ஸ்ரீனிவாசன் கேட்டு சந்தோஷத்துடன் கருடன் மேலேறி புறப்பட்டு பத்ம ஸரோ வரம் சேரும்போது பிரம்மா, ஈஸ்வரர் ஸ்ரீனிவாசனை சந்தித்து திருமூர்த்திகளும் ஆனந்தமாய் பத்மஸரோவரத்தினிடம் சேர்ந்து ஆதிலக்ஷ்மியை கொண்டாடினார். பிரம்மதேவன் ஸ்ரீனிவாசனைப் பார்த்து, பூர்வம் வீரலக்ஷ்மியாய் பிறந்த இந்த பத்மஸரோவரததில் ஆதிலக்ஷ்மி தோன்றினாள். இவ் விடத்தில் ஓர் அழகான ஆலயம் கட்டி, அந்த ஆலயததில் லக்ஷ்மியை நிவசிக்கச் செய்து கார்த்திகை மீ சுத்த பஞ்சமி உத்தராஷாடா வெள்ளிக்கிழமை யன்று இப்புண்ணிய தீர்த் தத்தில் ஸ்நானம் செய்தவர்களுக்கு சர்வபாபமும் நீங்கி சகல சௌபாக்கியங்களும் ஐஸ்வர்யமும் அடைவார்க ளென்று சொன்னார். அவ்வார்த்தைகளைக் கேட்டு ஸ்ரீனி வாசன் லக்ஷ்மீதேவியைப் பார்த்து பிரம்மாவின் விருபபம் இவ்வாருக இருக்கின்றது. என் விருப்பம் நீ சேஷாசலத்தில் வசிதது வியூஹா லக்ஷ்மியுடன் நீயும் நானும வசித்தால் நன்ருயிருக்கு மென்றார். லக்ஷ்மி தன் நாதனைப் பார்தது

நாம் பிரம்மதேவனின் விருப்பத்தை நிறைவேற்ற வேண்டி திருப்பதால் நான் இவ்விடமே நிவசிப்பேன். இவ்விடம் ஒரு ஆலயம் நிர்மித்தது முன்பு எனக்காக நீங்கள் தவம் செய்த இந்த சுகக்ஷேத்திரத்தை பவித்திரமாக்கி, என்னை இவ்விடம் வசிக்கச் செய்யுப்படி பிரார்தித்தாள். ஸ்ரீனிவாசன் லக்ஷ்மியின் பிரார்தனையை அங்கீகரித்து விஸ்வகர்மாவை அழைப்பித்து பத்ம ஸரோவரத்திற்கு தென்கிழக்கு பாகத்தில் அழகான ஆலயம் நிர்மிக்கும்படி சொன்னார். உடனே விஸ்வகர்மா அழகான ஆலயத்தை நிர்மித்தான். பிரமம்ன் முதலான தேவர்கள், முனிவர்கள், கந்தருவர்கள் கொண்டாட அந்த அழகான ஆலயத்தில் லக்ஷ்மீதேவியைப் பிரவேசிக்கச் செய்து, சாயாசுகரால் பாஞ்சாராத்ரோக்த மாய் சகலோபசாரங்களும் செய்வித்து மஹா வைபவங்க ளுடன் ஸ்ரீ பூதேவி ஸ்ரீதேவி சமேதராய் பத்மஸரோ வரத்தை பிரதக்ஷிணை செய்து பக்தர்களுக்கு தரிசனம் கொடுத்து, பிரம்மன் முதலான தேவர்களுக்கு விருந்து செய்து, சந்தன தாம்பூல வஸ்திரங்களுடன் அவர்களுக்கு திருப்தி செய்து ஸ்ரீனிவாசன் தன் கழுத்திலுள்ள ஒரு புஷ்ப ஹாரத்தை லக்ஷ்மியின் கழுத்தில் போட்டு, உன் பூர்வாங் கத்தைப் பார்த்து சந்தோஷமடைந்தேன்; நீ இந்த சுகாஸ்ர மத்தில் வசித்து, சாயாசுகனால் பூஜைகள் பெற்று, பக்தர் களுக்கு தன கனக வஸ்து வாஹனங்களை அளித்து அவர்களால் எனக்கு காணிக்கைகள் செலுத்தும்படி அவர்களை தூண்டும்படி கூறினார். அவ்வார்த்தைகளை கேட்ட லக்ஷ்மி நாதனுக்கு நமஸ்கரித்து ஒவ்வொரு வருஷமும் மார்க்கசிர சுத்த பஞ்சமியன்று நீங்கள் ஒரு வஸ்திரமும் புஷ்பமாலையும் அனுப்ப வேண்டுமென்று கோரினாள். ஸ்ரீனி வாசன் அப்படியே ஆகட்டுமென்று வரம் கொடுத்து, சாயா சுகனைப் பார்த்து இந்த க்ஷேத்திரத்தில் ஒரு அக்ரஹாரம் நிர்மித்து, நீ இந்த லக்ஷ்மியை பூஜித்து வரும்படி சொல்லி லக்ஷ்மியை பத்மஸரோவரத்தில் வசிக்கச்செய்து ஸ்ரீனி வாசன் சேஷாசலம் சேர்ந்து, பிறந்து வளர்த்துவரும் இந்த பூலோகவாசிகளை ரக்ஷிக்க சேஷாசலத்தில் பிரசித்திபெற்று

பக்தர்களால் கோவிந்தநாம சங்கீர்த்தனங்கள் செய்வித்துக் கொண்டு அவர்களுடைய மஹா பாபங்களை பரிஹாரம் செய்தும் பக்தர்களுக்கு மோக்ஷம் கொடுத்தும், ஐஸ்வர்யம் கொடுத்து காப்பாற்றிக்கொண்டு மங்களகரம் பெற்று பிரகாசிக்கின்ற ஸ்ரீ ஸ்ரீனிவாசனுக்கு மங்களம் மங்களம் ஜெய மங்களம்.

# கலியுகத்தில் வேங்கடாசலம் என்ற பெயர் உண்டாகுதல்

பூர்வம் காளஹஸ்தி என்கிற சிவ க்ஷேத்திரத்தில் புரந்தரன் என்கிற உத்தம பிராம்மணர் ஒருவரிருந்தார். அவருக்கு மாதவன் என்கிற குமாரன் பிறந்தான் புரந்தரன் தன் குமாரனுக்கு சகல சாஸ்திர புராணங்களையும் கற்பித்து தகுந்த வயதில் அவனுக்கு விவாஹம் செய்வித்து, குல ஜீவனத்தால் காலங்கழித்து வந்தார்கள் சில நாட்களுக்கு பிறகு புரந்தரன் மரணமடைந்தான். மாதவன் தந்தைக்கு செய்ய வேண்டிய கருமங்களை சாஸ்திர முறைப்படி செய்து தன் மனைவியுடன் அன்னியோன்யமாயிருந்து, சதா தெய்வ காரியங்களை செய்து வந்தனர். ஒரு நாள் அந்த தம்பதிகளிருவரும் விநோதமாய் வனத்திற்கு சென்றனர். அந்த வனத்தில் நல்ல யௌவனமும், சௌந்தர்யமுள்ள ஓர் சண்டாள ஸ்திரீ மாதவன் கண்ணில் பட்டாள். மாதவன் அந்த ஸ்திரீமேல் மோஹம் கொண்டு தன் மனைவியை பார்த்து. நீ வீட்டிற்குச் செல்; நான் புஷ்பவனம் சென்று பகவானுக்கு புஷ்பங்கள் கொண்டு வருகிறேன் நீ பூஜைக்கு வேண்டிய காரியங்களை செய்துவை யென்று சொல்லி தன் மனைவியை வீட்டிற்கு அனுப்பி விட்டான். பிறகு அந்த சண்டாள ஸ்திரீ வசித்துவந்த வீட்டிற்கு சென்றான். ஸ்திரீ மாதவனுக்கு நமஸ்கரித்து, இது சண்டாளர் வீடு தாங்கள் இந்த அபவித்ரமான இடத்திற்கு ஏன் வந்தீர்கள் திரும்பிப் போய் விடுங்களென்று சொன்னாள். இவ்வார்த்தைகளைக் கேட்ட பிராம்மணன் சன்டாளத்வம் ஏது? மனம் சம்மதித்

தால் சண்டாளத்வம் நீங்கிவிடும் என் மனம் சம்மதி தால் உன் சண்டாளத்வம் போய்விட்டது. நீ என்னை விவாஹம் செய்து கொண்டு சுகமாயிருக்கலாமென்று கூறி, அவள் சமீபம் சென்றான். அவள் வேண்டாமென்று தடுத் தாலும் அவளை காதலித்து சண்டாளத்வம் பெற்றான். இப்படி சிலகாலம் அந்த ஸ்திரீயுடன் சுகமனுபவித்துக் கொண்டிருக்கும் நாளில் அவள் அகஸ்மாத்தாய் மரண மடைந்தாள். அவள் மரணத்தைக் குறித்து மாதவன் மிகவும் துக்கிற்று, அந்த கிராமத்தை விட்டு ஊர் ஊராய் சுற்றி பிச்சை யெடுத்துக் கொண்டு காலங் கழித்துவந்தான். சில வடதேசத்தவர்கள் திருப்பதிக்கு யாத்திரையாய் வந்துக் கொண்டிருந்தனர் மாதவன் அவர்களுடன் சேர்ந்து திருப்பதிக்கு வந்துக்கொண்டு, அவர்கள் கொடுத்த மிகுதி சோற்றை புசித்து, அவர்களுடன் திருப்தி சேர்ந்து கபில தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தான். அந்த சண்டாளன் கபில தீர்த்தத்தில் ஸ்நானம்சேய்தவுடன் அவனுடைய பாபங்கள் அவன் தேஹத்திலிருந்து அக்கினி ஜ்வாலைகள்போல் எறிக்கத் தொடங்கியது. மாதவன் ஸ்நானம்செய்ததும் சேஷாசல பர்வதம் ஏறிக் கொண்டிருக்கும்போது தான் செய்த பாபங்கள் நினைவிற்கு வரத் தொடங்கிற்று. அவன் தன் பூர்வ சரித்திரத்தை நினைத்துக்கொண்டு தான் சண்டா ளத்வம் அடைந்ததற்கு மிகவும் வருந்தி தனக்கு சேர்ந்த பாபங்களை நிவர்திக்க வேண்டுமென்று பகவானை அநேக விதங்களில் பிரார்தித்துக் கொண்டு சேஷாத்ரி சேர்ந்து பக்தியுடன் சுவாமீ புஷ்கரணியில் ஸ்நானம்செய்து வெளியே வரும்போது ஸ்ரீனிவாசன் மாதவனுக்கு பிரத்தியக்ஷமாய் நீ பாபத்திலிருந்து விலக்கப்பட்டவனாய்விட்டாய். உன் சண்டாளத்வம் போய்விட்டது நீ பாண்டவ வம்சத்தில் சுதர்மனின் குமாரனாய் பிறந்து சோழராஜ்யத்தை ஆளும்படி வரம் கொடுத்தார். அந்த வரத்தைபெற்று மாதவன் ஸ்ரீனி வாசனுக்கு நமஸ்கரித்து தன் தேஹத்தை விட்டு பாண்டவ வம்சத்தில் சுதர்மனின் குமாரனாய் பிறந்தான்,

# தீர்த்த மஹாத்மியங்கள்

இந்த க்ஷேத்ரத்தில் 364 தீர்த்தங்க ளிருப்பதாய் புராணங்களில் சொல்லப்படுகின்றது அந்த தீர்த்தங்கள் மானவர்களுக்கு கோசரமாகாததால் இவ்விடமுள்ள முக்கியமான சில தீர்த்தங்கள் மஹிமையுடன் பிரகாசிக்கின்றன. அவைகள் வருமாறு.

1. வைகுண்ட தீர்த்தம்
2. சக்ர தீர்த்தம்
3. ஜாபாலி தீர்த்தம்
4. துருவ தீர்த்தம்
5. ஆகாசகங்கை தீர்த்தம்
6. பாபவிநசனம் தீர்த்தம்
7. பாண்டவ தீரத்தம் (அல்) கோகர்ப தீர்த்தம்
8. குமாரதாரை தீர்த்தம்
9. இராமகிருஷ்ண தீர்த்தம்
10. தும்புரு தீர்த்தம்
11. சேஷ தீர்த்தம்
12 ஸனகஸநந்தன தீர்த்தம்
13. யுத்தகள தீர்த்தம்
14. சிதம்ம தீர்த்தம்

இந்த தீர்த்தங்கள் பிரசித்தி பெற்றிருக்கின்றன ஆனல் இந்த க்ஷேத்திரத்திலுள்ள 364 தீர்த்தங்களும், வைகுண்ட ஏகாதசி மறுநாள் துவாதசியன்று ஸ்ரீ சுவாமி புஷ்கரணியில் சேருகிறது. அன்றையதினம் சக்ரஸ்நானம் சுவாமி புஷ்கரணியில் நடக்கும். ஆகையால் பக்தர்கள் ஆயிரக் கணக்கில் சக்ர ஸ்நானத்துடன் ஸ்நானம் செய்வார்கள்.

# சுவாமி புஷ்கரணி மஹாத்மியம்

ஸ்லோகம்॥ ஸ்வாமி புஷ்கரணி ஸ்நானம்
ஸத்குரோர் பாதஸேவனம்।
ஏகாதசீ விரதம்சாபி
த்ரயமத்யந்த துர்லபம்॥

துர்லபம் மானுஷம் ஜன்மம்
துர்லயம் தத்ரஜீவனம்।
ஸ்வாமி புஷ்கரணி ஸ்நானம்
த்யந்த துர்லபம்॥

இந்த புஷ்கரணி கிருதயுகத்தில் வைகுண்டத்திலிருந்து கருடனால் கொண்டுவரப் பெற்ற கிரீடத்ரியில் இருப்பதால் பிரம்மன், இந்திராதி தேவர்கள், தசரதன், பஞ்சபாண்டவர்கள். அஞ்சனாதேவி முதலானவர்கள் இந்த தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து அவரவர்கள், கோரிக்கைகள் ஈடேரியதாலும், கலியுகத்தில் பக்தர்கள், பாகவதர்கள், கிருகஸ்தர்கள், பண்டிதர்கள். பாமரர்கள் இந்த புஷ்கரணியில் ஸ்நானம்செய்து ஸந்ததி யில்லாதவர்கள் ஸந்ததி பெற்றும், தரித்திரர்கள் ஐஸ்வர்வத்தையும், பக்தர்கள் மோக்ஷத்தையும் தேவர்கள் சுவர்க்கத்தையும் பெறுவதால் இந்த தீர்த்தப் பிரபாவம் ஆதிசேஷனாலும் வர்ணிக் முடியாதென்று புராணங்களில் சொல்லப்படுகின்றது. யாத்திரை வரும் பக்தர்களனைவரும் இந்த தீர்த்தத்தில் ஸ்நானம் செய்வது முக்கியம்.

# பாபவினாச தீர்த்தம்

இந்த தீர்த்தம் சுவாமி ஆலயத்திற்கு வடதிசையில் சுமார் 3 மைல் தூரத்தில் இருக்கிறது.

## ஆகாசகங்கை தீர்த்தம்

இந்த தீர்த்தம் சுவாமி ஆலயத்திற்கு வடதிசையில் பாப விமோசம் போகும் வழியில், சுவாமி ஆலயத்திற்கு 2 மைல் தூரத்தில் இருக்கின்றது.

## கோரார்பம் என்கிற பாண்டவ தீர்த்தம்

இந்த தீர்த்தம் சுவாமி ஆலயத்திற்கு வடதிசையில் சுமார் ஒரு மைல் தூரத்தில் இருக்கிறது.

திருப்பதிக்கு வரும் யாத்ரீகர்கள் )ம் மூன்று தீர்த்தங்களில் ஸ்நானம் செய்வது வழக்கம்.

மேற்கண்ட மூன்று தீர்த்தங்களுக்கும் போக எண்ணியவர்கள் காலை ஐந்து மணிக்கு புறப்பட்டுச் சென்று முதலில் பாபவிமோச தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து பிறகு அதே வழியிலுள்ள ஆகாச கங்கையில் ஸ்நானம் செய்யவேண்டும் மூன்றுவது ஊருக்கு சமீபத்திலுள்ள கோகர்பம் என்னும் பாண்டவ தீர்த்தம் சென்று அவ்விடம் ஸ்நானம்செய்ய வேண்டும் இம் மூன்று தீர்த்தங்களிலும் ஸ்நானம்செய்து காலை பத்து மணிக்குள் திருமலைக்கு வந்து விடலாம். பாப விமோச தீர்த்தத்தினிடம் காபி ஹோட்டல் முதலான வைகளுமுண்டு, வழியில் எந்த விதமான பயமுமில்லை. அவ்விடம் சங்கல்பம் முதலானவை செய்விக்க தீர்த்தவாசிகள் (புரோகிதர்கள்) இருப்பார்கள்.

## ஜாபாலி தீர்த்தம்

இந்த தீர்த்தம் சுவாமி ஆலயத்திற்கு வடமேற்டி திசையில் சுமார் இரண்டு மைல் தூரத்திலுள்ளது. அவ்விடம் ஜாபாலி மஹரிஷி தவம் புரிந்து முக்திபெற்ற புண்ய தீர்த்தம் இங்கேஓர் பெரிய ஆஞ்சநேயர் ஆலயம் அஞ்சனுதேவி திர்த்தமும் இருக்கின்றது ஆஞ்சநேயர் ஆலயத்திற்கு பின் பாகத்தில் துருவ தீர்த்தமும் இருக்கின்றது அந்த ஆஞ்சநேயர் ஆலயத்தை திருமலை ஹத்தீராம்ஜீ

மடத்தார் அவர்களின் சுவாதீனத்தில் வைத்துக் கொண்டு தினமும் பூஜை வகைராக்கள் நடத்திவருகின்றனர். இவ்விடத்திற்கு இந்துஸ்தானி யாத்ரீகர்கள் விசேஷமாய் சென்று ஸ்நானம் செய்கின்றனர். கோடைகாலத்தில் இவ் விடம் மிகவும குளிர்ச்சியாகவும், மனோல்லாஸமாகவும் இருக்கும்.

## சக்ர தீர்த்தம்

இந்த தீர்த்தம் சுவாமி ஆலயத்திற்கு வடமேற்கு திசை யில் சுமார் ஒரு மைல் தூரத்திலுள்ளது இந்த தீர்த்தத்திற்கு போகின்றவர்கள் நன்ருய் வழி தெரிந்தவர்களை அழைத்துக் கொண்டு போகவெண்டும். ஒரு காலத்தில் இவ்விடத்தில் தவம் செய்துவந்த பக்தர்களை அரக்கர்கள் ஹிம்சைசெய்துக் கொண்டிருந்தார்கள் இந்த விஷயத்தை மஹாவிஷ்ணு அறிந்து, தன் சக்ராயுதத்தால் அவர்களை ஸம்ஹரித்து, அந்த சக்கராயுதத்தை அங்கே ஸ்தாபித்து பக்தர்களை ரக்ஷித்ததார் இதற்கு சக்ர தீர்த்தமென்று பெயா விளங்கி யது. பிரதி வருஷமும் அர்ச்சகர்கள் ஏகாங்கி தேவஸ்தான ஆபீஸர்கள், மற்றும் இந்த கிராமவா சிகளும் சென்ற, அங்கே ஸ்தாபித்துள்ள சக்ராயுதத்திற்கு அபிஷோம், பிரசாத நைவேத்தியம். கற்பூர ஹாரதிகள் செய்து, பிறகு ஆஸ்தானம் நடத்துகின்றனர். நைய்வேத்யம் செய்த பிரசாதங்களை எல்லோருக்கும் வினியோகம் செய் வார்கள். இந்த தீர்த்தத்தில் எப்போது வேண்டு மானலும் ஸ்நானம் செய்யலாம்.

## தும்புரு தீர்த்தம்

இந்த தீர்த்தம் சுவாமி கோவிலுக்கு வடக்கிழக்கு பாகத் தில் சுமார் எட்டு மைல் தூரத்திலுள்ளது. இந்த தீர்த்தத் திற்கு செல்லுபவர்கள் நன்ருய் வழிதெரிந்தவர்களை அழைத்துக் கொண்டு போக வேண்டும் பங்குணிபௌர்ண மியன்று இவ்விடம் தீர்த்தமுக்கோடி நடக்கும் அன்றைய தினம் சுமார் ஆயிரம் ஜனங்களுக்குமேல் சென்று ஸ்நானம்

செய்வார்கள், அன்று இந்த க்ஷேத்திரபுரோகிதர்கள் வழியில் தண்ணீர்ப்பந்தல் வைத்து, இந்த தீர்த்த முக்கோடிக்கு போய்வருகிறவர்களுக்கு பானகம் மோர் முதலியவைகள் தர்மமாக கொடுப்பார்கள். இந்த தீர்த்தத்திற்கு காலை 5 மணிக்கு திருமலையிலிருந்து புறப்பட்டுச் சென்று ஸ்நானம் செய்து விட்டு சாயந்திரம் 6 மணிக்கு வந்துவிடலாம் போகும் வழியில் (இந்த தீர்த்தத்திற்கு சமீபத்தில்) பக்தசிரோன் மணியான தரிகொண்ட வேங்கமாம்பாள் தவம் செய்து முக்தி பெற்ற இடமான ஆசிரமம் இப்போதும் பார்க்கலாம் (மிகவும் கண் கவர்ச்சியுள்ள தீர்த்தமிது).

## இராமகிருஷ்ண தீர்த்தம்

இந்த தீர்த்தம் கோவிலுக்கு வடதிசையில் சுமார் 6 மைல் தூரத்திலுள்ளது. இவ்விடம் தீர்த்த முக்கோடி தை மாதம் பௌர்ணமியன்று நடக்கும். அன்று சுமார் ஆயிரம் பேர்களுக்குமேல் இந்த தீர்த்தத்தில் ஸ்நானம் செய்வார்கள் மேற்சொன்ன தினத்தன்றுகோவிலில்யிருக்கும் அர்ச்சகர்கள், ஏகாங்கிகள் மற்றும் கோவில் கைங்கர்யம் செய்பவர்களும் ஒன்றுகூடி காலை 5 மணிக்குள் கோவில் கைங்கர்யங்களை முடித்துகொண்டு, புறப்பட்டு சுமார் 8 மணிக்கெல்லாம் இராமகிருஷ்ண தீர்த்தம் சேருவார்கள். இந்த தீர்த்தத்தினிடம் இயர்க்கையாய் அமைந்துள்ள ஓர் மலைக்குகையில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ கண்ணபிரானுக்கு அபிஷேகம் செய்து, பொங்கல் முதலான பிரசாதங்கள் செய்து நைவேதயம் செய்வித்து, ஆஸ்தானம் நடத்துவார்கள். அநேக பக்தர்கள் அவரவர்களிஷ்டப்படி அங்கு வந்த ஜனங்களுக்கு சமாராதனை செய்வார்கள் அர்ச்சகர்கள் கூட சுமார் 20 பேருக்கு சமாராதனை செய்விப்பார்கள் ஆந்த தீர்த்தத்தில் ஓர் அதிசயமுண்டு அது என்னவென்றால் வெய்யில் நன்றாககாயும் போது சுமார் 12 மணிக்கு அந்த நீர்வீழ்ச்சியில் பார்த்தால் ஏழு வர்ணங்களில் ஓர் தனுசு காணப்படும். அது பார்ப்பதற்கு மிகவும் அழகாயிருக்கும் ஆனால் இந்த தீர்த்தத்திற்கு போவது கொஞ்சம் கஷ்டம்.

# குமாரதாரை தீர்த்தம்

இந்த தீர்த்தம் சுவாமி கோவிலுக்கு சுமார் 5½ மைல் தூரத்திலுள்ளது ஆனல் இந்த தீர்தத்திற்கு போவதும் கொஞ்சம் கஷ்டம்தான். இந்த தீர்த்தம் முக்கோடி தை மாதம் சுக்லபக்ஷ பௌர்ணமியன்று நடக்கும் அன்று சுமார் ஆயிரம் பேர்வரை இந்த தீர்த்தத்தில் ஸ்நானம் செய்வார்கள். யாத்ரீகர்கள் இந்த தீர்த்தத்தில் ஸ்நானம் செய்வதானல் நன்ருய் வழி தெரிந்தவர்களுடன் செல்ல வேண்டும்.

# வைகுண்ட தீர்த்தம்

இந்த தீர்த்தம் சுவாமி கோவிலுக்கு கிழக்கு திசையில் சுமார் இரண்டு மைல் தூரத்திலுள்ளது, ஸ்ரீராமபிரான் ரிஷிமுக பர்வதத்திலிருந்து இலங்கைக்கு போகும் சமயத்தில் ஒரு நாள் இவ்விடம் தங்கினர். அப்போது சில வானரர்கள் இந்த குகைக்குள் பிரவேசித்தனர். அவ்விடம் வசித்து வந்தவர்களைப் பார்த்து, இது இராவணனுடைய மாயை என்று நினைத்து, ஸ்ரீ ராமனிடம் சென்று இந்த பர்வதத்தில் நாங்கள் ஒரு குகையில் பிரவேசித்தோம் அந்த குகையிலுள்ளவர்கள் எல்லோரும் சங்கு, சக்ர, கதாதாரர்களாகயிருக்கின்றனர். அவர்கள் இராவணனுடைய மாயையால் எங்களுக்கு இப்படி தெரிகின்றனர் என்று அந்த குகையைவிட்டு வந்தோமென்று கூறினர். இவ்வார்த்தைகளைக் கேட்டு ஸ்ரீராமபிரான், அந்த குகையில் ஸ்ரீ விஷ்ணு ராமாஸமேதராய் வசித்திருந்து அநேக பக்தர்களுக்கு தரிசனம் கொடுத்து வருகின்ரனர் விஷ்ணுபகவான் வசித்துவந்த குகையையே நீங்கள் பார்த்துவிட்டு வந்தது. குகையின் முன்பாகத்திலுள்ள தடாகம் வைகுண்ட தீர்த்தமென்று சொன்னர். அந்த வார்த்தைகளைக் கேட்ட வானரர்கள் வைகுண்ட தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து மறுதினம் ஸ்ரீராமருடன் லங்காபுரிக்கு வந்தனர். இந்த தீர்த்தத்தில் ஸ்நானம் செய்ய நினைத்த யாத்ரீகர்கள் வழி தெரிந்தவர்களை அழைத்துப் போக வேண்டும்



# சப்த பர்வத நாமங்கள்

வேம்" என்றால் ஸமஸ்த பாபங்கள் என்றும்;

கட" என்றால் தஹநம், என்றும் அர்த்தம்.

சர்வ பாபங்களும் தரிக்கப்பட்ட புண்ணிய க்ஷேத்திரமானதால் கலியுகத்தில் வேங்கடாத்ரி என்கிற பெயர் உண்டாயிற்று.

கிருதயுகத்தில் :—

ஆதிசேஷ ரூபத்தில் இருப்பதால் "சேஷாசலம்" என்றும்
வேதங்களால் நிறைந்திருப்பதால் "வேதாசலம்" என்றும்

கருடனால் பூலோகத்திற்கு
கொண்டுவந்தபடியால் "கருடாசலம்" என்றும்
விருஷபாசுரனை சம்ஹாரித்து மோக்ஷம் கொடுத்ததினால்
"விருஷபாத்ரி" என்றும்

திரேதாயுகத்தில் :—

அஞ்ஜனாதேவி தவம் செய்து ஆஞ்ஜநேயனை
குமாரனாய் பெற்றததால் 'அஞ்ஜனாத்ரி' என்றும்

துவாபரயுகத்தில் :—

ஆதிசேஷனையும், வாயுபகவானையும் தூண்டி
ஆனந்த பர்வதத்தை, இவ்விடம்
கொண்டு வந்தபடியால் "ஆனந்தாத்ரி என்றும்

கலியுகத்தில் :—

மாகாசண்டாளத்வமடைந்த மாதவனுக்கு. பகவான் பிரத்யக்ஷமாய் அவனுடைய பாபங்களைப் போக்கியதால் "வேங்கடாசல" மென்றும் பெயர்கள் உண்டாயிற்று.

பக்தர்கள் அவரவர்கள் கோரிக்கைகள் இந்த க்ஷேத்திரத்தில் நிறைவேற்றிக் கொண்டதால் இந்த பர்வதத்தை அநேக நாமங்களால் கொண்டாடப் பட்டிருக்கிறது.

ஸ்ரீ வேங்கடேஸ்வர
லீலா மஹாத்மியம் முற்றிற்று.

சுபம் சுபம் சுபம்

